Regd. M. No. 583 Phone: No. 21541

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தர்   JANASAKTHI

(வெளியூர் பதிப்பு)



மலர் 16 இதழ் 101]   சென்னை 28-11-59 விகாரிஸு கார்த்திகைமீ 12உ சனிக்கிழமை   [4 பக்கங்கள் 7 காசுகள்

# குறைகூறுபவருக்கு மேனன் பதில்

## இந்திய அரசாங்கத்தின் கொள்கையையே நான் பிரதிபலித்தேன்

### ‘நம்பிக்கை’ப் பிரச்சினையை கிளப்பியவர்களுக்கும் சூடு

புதுடில்லி, நவ. 26—

**பம்பாயிலும் அமெரிக்காவிலும், தான் செய்த பிரசங்கங்களைக் குற்ற விமர்சனம் செய்தவர்களுக்கு, பாதுகாப்புத் துறை அமைச்சர் திரு. கிருஷ்ணமேனன் இன்று மக்கள் சபையில் பதில் கொடுத்தார். இந்திய சர்க்காரின் கொள்கைகளையே தான் பிரதிபலித்ததாகக் கூறினர்.**

“இந்தியா தனக்கு வேண்டிய பாதுகாப்பு சாதனங்களையோ, ஆயுதங்களையோ, கிழக்கு நாடுகளிடமிருந்தோ, அல்லது மேற்கு நாடுகளிடமிருந்தோ—யாரிடமிருந்தும் வாங்குவதற்கு இந்தியாவின் கொள்கை எவ்விதத்திலும் தடை செய்யவில்லை. ஆனால் ஒரேஒரு விஷயம் என்னவெனில், இந்தியா அவைகளை விலைகொடுத்து வாங்க விரும்புகிறது. இதர நாடுகளிலிருந்து ராணுவ உதவியைக் கோர விரும்பவில்லை. அதன் மூலம் அந்நாட்டின் உள்நாட்டுச் சட்டங்களுக்குக் கட்டுப்பட விரும்பவில்லை” என்று இந்தியாவின் பாதுகாப்புத்துறை அமைச்சர் திரு. வி. கே. கிருஷ்ணமேனன், இன்று மக்கள் சபையில், சீன-இந்திய உறவுகள் சம்பந்தமாக நடைபெறும் விவாதத்தினூடே பேசுகையில் கூறினர்.

ஐக்கிய நாடுகள் சபையிலும், இந்தியாவிலும் தான் செய்த சில பிரசங்கங்களின் மீது சில பி. சோ., ஜனசங், சுதந்திரக் கட்சி உறுப்பினர்கள் கிளப்பிய ஆட்சேபங்களுக்குக் கிருஷ்ணமேனன் பதிலளித்தார்.

பம்பாயிலோ, அமெரிக்காவிலோ தான் செய்த பிரசங்கங்கள் சம்பந்தமாக மன்னிப்புக் கோருவதற்கு ஒன்றுமேயில்லை. “அந்தப் பேச்சுகளில் சர்க்காரின் கொள்கைகளையே என்னுல் முடிந்த வரையில் பிரதிபலித்திருக்கிறேன்” என்று கிருஷ்ணமேனன் கூறினர்.

அண்மையில் நடைபெற்ற ஐ. நா. சபைக் கூட்டத்தில் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்திற்குள் சீனவை அனுமதிக்கவேண்டும் என்று இந்தியா வாதாடியது மிகவும் சரியே என்று பலமாக வலியுறுத்திப் பேசினர்.

“உலக நாடுகள் அனைத்தும் ஐ. நா. சபையில் பிரதிநிதித்துவம் பெருவிட்டால் அதற்குப் போதிய பலம் இருக்காது; தன்னுடைய சாசனத்தின் லட்சியத்தையும் நிறைவேற்ற முடியாது. உதாரணமாக சீனுவும் ஒத்துக்கொண்டு கட்டுப்படச் செய்யாமல் உலகத்தில் ஆயுதப் பரிகரணம் சாத்தியமல்ல” என்றுர்.

நாட்டின் எல்லைகள் பாதுகாப்புப் பிரச்சினையைப் பொறுத்த மட்டிலும் பிரதேசத்தைவிட்டுக் கொடுப்பதென்பதோ அல்லது உடனேயே காலங் கழித்தோ தன்னுல் நியாயப்படுத்தமுடியாத நடவடிக்கை எடுப்பதோ சர்க்காரின் கொள்கையல்ல என்று மேனன் கூறினர்.

பாதுகாப்புத்துறை அமைச்சர் பொதுமக்களின் நம்பிக்கையையும் பெற்றவராக இருக்கவேண்டும் என்று எதிர்க்கட்சியினரில் சிலர் கூறியதை மேனன் குறிப்பிட்டு, சரியாகவோ தப்பாகவோ ஒரு பார்லிமெண்டரி ஜனநாயக அமைப்பில் மந்திரிகள் எதிர்க் கட்சியினரால் நியமிக்கப்படுவதில்லை என்று சிரிப்புக்கிடையில் கூறினுர்.

#### குறை கூறுவோருக்கு பதில்

பம்பாயில் தான் செய்த பிரசங்கத்தின் மீது எழுந்த விமர்சனத்தைப் பற்றி மேனன் குறிப்பிடுகையில்,

“‘சீனர்கள் நம் நாட்டை ஆக்ரமிக்கவில்லை’ என்று நான் கூறியதாகக் குற்றம் சாட்டப்பட்டது. முதல் முதலில், ஆக்ரமிப்பு என்ற வார்த்தையையே உபயோகித்ததாக எனக்கு நினைவில்லை.

“அமெரிக்காவிலும்கூட கடந்த 7 வருஷங்களாக ஆக்ரமிப்பு என்றுல் என்ன என்பதை விளக்குவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறது. ஆனால் ஒவ்வொரு வருஷமும் அது முடிவை ஒத்திப் போட்டுக்கொண்டே வருகிறது. நான் கூறியதெல்லாம், இந்நாட்டின் மீது படையெடுப்பு நிகழவில்லை, என்பதே. இதைத் தவிர வேறெதுவும் கூறுவது தவருகும். ஒரு நாட்டின் மீது படையெடுப்பு நிகழ்வதும், எல்லை மீறல்கள் நடைபெறுவதும்—இரண்டும் ஒன்றுக்கொன்று மிகவும் வித்தியாசப்பட்டவை. எல்லை மீறலில் உயிர்ச் சேதமும், ராணுவ நடவடிக்கையும் இருந்த போதிலும்கூட” என்றுர்.

#### அடையாளச் சீட்டு தேவையில்லை

தனிப்பட்ட முறையில் என்னைப் பற்றிக் கூறியவைகளுக்கோ அல்லது நாணயத்தைப் பற்றியோ, தேசபக்தியைப் பற்றியோ எழுப்பப்பட்ட பிரச்சினைகளுக்கு பதில்கூற எனக்கு விருப்பம் கிடையாது. தேசபக்தியுள்ளவன் என்ற ஒரு அடையாளச் சீட்டை நான் என்னுடன் தாங்கிச் செல்லவேண்டிய காலம் வருமேயானுல், அப்பொழுது அதைத் தாங்கிச் செல்வதில் எவ்விதப் பலனும் இருக்காது. (கரகோஷம்) சிலருக்கு அதைத் தாங்கிச் செல்வதும் தங்களுடைய தேசபக்தியைப் பிரகடனம் செய்யவேண்டியதும் அவசியமெனப்படலாம் என்றும் மேனன் கூறினுர்.

## மாஸ்கோவில் கினியா ஜனதிபதி

### பாண்டுங் நாடுகளின் விருந்துபசாரம்

மாஸ்கோ, நவ. 25—

கினியாவின் ஜனதிபதி செகோடோர், சோவியத் யூனியனுக்கு விஜயஞ் செய்திருக்கிறுர். அவருக்கு இன்று மாஸ்கோவில் பாண்டுங் நாடுகளின் சார்பில் நடந்த விருந்தில் இந்திய தூதர் கே. பி. எஸ். மேனன் தலைமைவகித்தார்.

பாகிஸ்தான் தவிர பாண்டுங் நாடுகள் அனைத்தின் பிரதிநிதிகளும் சோவியத் சர்க்கார் மந்திரிகளும் வந்திருந்தனர்.

மாஸ்கோவில் பாண்டுங் நாடுகளின் சார்பில் நடக்கும் விருந்து, ராஜீய துறையில் விசேஷம் வாய்ந்ததாகும். ராஜீய உறவு வைத்துக் கொள்ளாத சீனு, துருக்கி இந்நாடுகளின் தூதர்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கவும் பகை நாடுகளாகவிருக்கும் ஐக்கிய அரபுக் குடியரசு, இராக் இந்நாடுகளின் தூதர்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கவும், பாண்டுங் நாடுகள் நடத்தும் விருந்து ஒரு வாய்ப்பாகவிருக்கிறது. ஆசிய, ஆப்ரிக்க நாடுகளின் ஒருமைப்பாட்டிற்கும் இவ்வித விருந்துகள் ஒரு சாதனமாக அமைகின்றன.

கினியா ஜனதிபதி பேசுகையில் மீண்டும் ஆப்ரிக்க, ஆசிய நாடுகளின் மாநாடு ஒன்று கூட்ட வேண்டுமென்றும் அம்மகாநாடு 1955 ஆண்டில் கூடிய பாண்டுங் மகாநாட்டின் வேலையைத் தொடர்ந்து நடத்தவேண்டுமென்றும் வற்புறுத்தினுர்.

## ஹரிஜனங்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கும் மசோதா

### வாபஸை வற்புறுத்தி நேருவிடம் மகஜர்

புதுடில்லி, நவ. 26—

பார்லிமெண்டிலும் ராஜ்ய சட்டசபைகளிலும் ஹரிஜனங்களுக்கும் மலைஜாதியாருக்கும் ஸ்தானங்களை ஒதுக்கும் கால வரம்பை மேற்கொண்டு பத்து ஆண்டுகளுக்கு நீடிக்க வேண்டுமென்ற நோக்கமுடைய அரசியல் சட்ட (8-வது) திருத்த மசோதா கடந்த வாரம் மக்கள் சபையில் உள்நாட்டு மந்திரியால் பிரேரேபிக்கப்பட்டது தெரிந்ததே.

அம்மசோதாவை வாபஸ் பெறுமாறு வேண்டிக்கொள்வதாக ஒரு விண்ணப்பத்தைப் பிரதமர் நேருவிடம் பார்லிமெண்டின் எட்டு உறுப்பினர்கள் சமர்ப்பித்தனர். எட்டு உறுப்பினர்களில் ஏழு பேர் குடியரசு கட்சியைச் சேர்ந்த திரு. என். சிவராஜ் முதலியவர்கள்.

—பி.டி.ஐ.

## பெர்லினுக்கு இந்தியப் புலிக்குட்டி

கல்கத்தா, நவ. 25—

பெர்லினிலுள்ள மிருகக்காட்சி சாலைக்கு இந்தியாவிலிருந்து ஒரு புலிக்குட்டி அனுப்பிவைக்கப்பட்டுள்ளது.

## வரிகளை ஆட்சேபிக்கக் கூடாதாம்

### 3-வது திட்டத்திற்கு ஏகாதிபத்ய நாடுகளின் உதவி அவசியமாம்

#### மொரார்ஜிதேசாய் பேச்சு

புதுடில்லி, நவ. 26—

வரிகளை ஆட்சேபிப்பது குறுகிய நோக்கமுடைய செயல்; வரிகளை கொடாமல் ஏய்ப்பது அதைவிட மோசமான செயல் என்று மத்திய நிதிமந்திரி திரு. மொரார்ஜி தேசாய் இன்று அறிவித்தார்.

இந்திய முதலாளிகள் சம்மேளனம் சார்பில் திட்டப்பிரசாரம் குறித்து நடந்த பேரவையை நிதிமந்திரி ஆரம்பித்துவைத்தார். அவர் பேசுகையில், வரிகளால் வரிகொடுப்பவர்களுக்கு அநுகூலம் இல்லாமலில்லை என்றுர். அந்த வரிகள் கல்விக்கும் இதர சமூக நலத் திட்டங்களுக்கும் பயன்படுகின்றனவென்றுர்.

#### சேமிப்புகள் முக்கியம்

“திட்டங்களுக்குத் தேவைப்படும் நிதிகளை வரிகள் அல்லது கடன்கள், சிறு சேமிப்புகள், அல்லது பொது நிறுவனங்களின் லாபங்கள் இவை மூலம் திரட்ட வேண்டும். சேமிப்புகள் முக்கியமாகும். 3-வது திட்டத்திற்கு வெளி நாடுகளின் உதவி அவசியமாகும். அவ்வித உதவி கிடைக்குமென்பதும் நிச்சயம். ஆனுல் நமது மூன்றுவது திட்டத்தின் வெற்றியும் நம் எல்லா திட்டங்களின் வெற்றியும் உள்நாட்டு நிதி திரட்டுவதையே பெரிதும் பொறுத்திருக்கிறது.

“நமது இறக்குமதிகள் அதிகரித்து வருகின்றன. அவற்றைச் சரிகட்ட நாம் நமது ஏற்றுமதிகளைக் கூடுதலாக்க முயற்சி செய்யவேண்டிய கட்டம் வந்து விட்டது.

“வெளிநாடுகளில் நாம் வாங்கியகடன்களைத்திருப்பிக்கொடுக்க வேண்டிய அவசியமும் உண்டு இதற்காக நாம் செய்யவேண்டியது என்ன? உற்பத்திச் செலவைக் குறைத்தும் உற்பத்தியைப் பெருக்கியும் அயல்நாடுகளுக்கு நமது சரக்குகளை அதிகம் ஏற்றுமதி செய்தும் வரவேண்டும்” என்றுர் மொரார்ஜிதேசாய்.

(வெளிநாடுகள் என்று மொரார்ஜி குறிப்பிடுவது அமெரிக்கா முதலிய ஏகாதிபத்திய நாடுகளை.)



## தேசபக்திக் குறைவு யாருக்கு?

### கல்கத்தா ஆர்ப்பாட்டம் பற்றி நேருவின் கூற்றுக்கு மறுப்பு

#### கம்யூனிஸ்ட் கட்சியின் மேற்குவங்க செயற்குழு பதில்

கல்கத்தா, நவ. 26—

கல்கத்தாவில் கம்யூனிஸ்ட் கட்சியும் இதர இடதுசாரி கட்சிகளும் நடத்திய ஆர்ப்பாட்டங்கள் குறித்து பிரதமர் நேரு மக்கள் சபையில் கூறிய கருத்துக்களை ஆட்சேபித்து இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மேற்கு வங்க செயற்குழு ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளது.

சீன - இந்திய தகராறு சமாதான முறையில் தீர வேண்டுமென்றும் இரு நாடுகளின் பிரதமர்களும் சந்தித்துப் பேசவேண்டுமென்றும் மக்கள் விரும்புவதை வெளியிடவே கல்கத்தாவில் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது. அந்த ஆர்ப்பாட்டத்தில் எழுப்பிய கோஷங்கள் தேசபக்தியைப் பிரதிபலிப்பனவையாகும். நாட்டில் யுத்தவெறியைத் தூண்டாமல் சமாதான முறையில் சீன-இந்திய தகராறு தீரவேண்டுவது முக்கியமென்பதை அக் கோஷங்கள் வற்புறுத்தின. கல்கத்தா பத்திரிகைகளில் வெளியான செய்திகள் பிரதமருக்கு அந்த ஆர்ப்பாட்டங்கள் பற்றி நன்கு தெளிவுபடுத்தும். ஆனுல் பிரதமர் சில தவருன தகவல்களை அடிப்படையாகக்கொண்டு அபிப்பிராயம் கூறிவிட்டார். பிரதமர் வெட்கப்படத் தக்கவாறு எதுவும் நடக்கவில்லையென்று நாங்கள் திடமாக தெரிவிப்போம். மற்றெருபுறம் பிரதமரிடம் எதிர்பார்த்தது இதுவே. அதே நாளில் கல்கத்தாவிலும் ஹௌராவிலும் நடந்த கூட்டங்களில் காங்கிரசும், பி. சோவும் மற்ற கட்சிகளும் எழுப்பிய கோஷங்களைப் பிரதமர் கண்டித்திருக்கவேண்டும். அக்கூட்டங்களில் பேசியவர்கள், வல்லரசு கோஷ்டியில் சேராதிருக்கும் இந்திய சர்க்கார்கொள்கையைக் கண்டித்தனர். மக்களிடைபோர்வெறி மூட்டினர். இந்திய சர்க்காரின் கொள்கையை எதிர்த்துப் பிரசாரம் செய்வது தேசபக்திக் குறைவான செயல் அல்லவா?”

—பி. டி. ஐ.

## திருப்பூரில் பரிபூரண ஹர்த்தால்

### போலீஸ் அக்கிரமத்தை எதிர்த்து நடந்தது

திருப்பூர், நவ. 27—

போலீஸ் அக்கிரமத்தை எதிர்த்து திருப்பூர் நகரத்தில் உள்ள பஞ்சு, பருத்தி, ஜினிங் பேக்டரி, பனியன் பேக்டரிகளும் ஜவுளி கடைகளும் 26-11-59ந் தேதி பூரண ஹர்த்தால் அனுஷ்டித்தன. 21—11—59-ந் தேதி காலை சுமார் 9 மணிக்கு தண்ணீர் குழாய் சச்சரவில் நகர போலீஸ் தலையிட்டு நமது நகர பஞ்சு வியாபாரியான ஸ்ரீ கே.ஏ. பழனிசாமி செட்டியாரிடமும், அவருடைய குடும்பத்தாரிடமும் அத்துமீறி நடந்துகொண்ட செயலைக் கண்டிப்பதற்காக 26—11—59ந் தேதி வியாழக்கிழமையன்று ஹர்த்தால் செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

## சீனி வினியோகம் பற்றி

### கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை நகர செயலாளர் அறிக்கை

மதுரை, நவ 27—

கார்டு மூலம் சீனி விநியோக முறையை அரசாங்கம் அமுலுக்குக் கொண்டுவரும் வரை சீனி விற்பதில்லையென்று தமிழ்நாடு வியாபாரிகள் சங்கம் தீர்மானித்துள்ளதை வாசகர்கள் அறிந்ததே. கார்டு இன்னும் விநியோகிக்காத மதுரை நகரில் சீனிக்காக மக்கள் படும் அவதியை விளக்கிக்கூறி, மாவட்டக் கலெக்டர் எடுக்கவேண்டிய நடவடிக்கையை வற்புறுத்தி, மதுரை நகர் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் ஏ. பி. பழனிச்சாமி ஓர் அறிக்கை விடுத்துள்ளார். அந்த அறிக்கையில்,

“மதுரை நகரில், “அரசாங்கம் கார்டு மூலம் சீனி சப்ளை செய்யும் முறையை அமுலுக்குக் கொண்டுவரும்வரை சீனி வாங்கி விற்பதில்லை” என்று தமிழ்நாடு வியாபாரிகள் சங்கத்தின் தீர்மானத்தைக்கொண்டு கம்யூனிஸ்ட் கட்சி கவலை கொள்கிறது.”

“சீனி வினியோகம் குறித்து சென்ற 14-10-59ந் தேதியன்று சென்னை சர்க்கார் அறிவிப்பு வந்தது முதல் குடும்பங்களுக்கும், சிறு டீ, காபி ஸ்டால்களுக்கும் அடையாள கார்டு கொடுக்கும்படியும், சீனி விற்பனையாளர்கள் ஜாபிதா கொடுக்கும்படியும், கம்யூனிஸ்ட் கட்சி தொடர்ந்து பலதடவை கேட்டது. மதுரை ஜில்லா கலெக்டர் ஜாபிதா தருவதாகச் சொல்லி இதுவரை தரவில்லை.”

“சென்னை, தூத்துக்குடி மற்றும் பல ஜில்லா கலெக்டர்கள் சீனி விநியோகத்திற்கு அடையாளக் கார்டு வழங்கி இருக்கிறுர்கள்.”

“மதுரை நகரிலும், சர்க்கார் சிப்பந்திகளுக்கும், போலீஸ்காரர்களுக்கும் முறையாக சீனி கிடைப்பதற்கு உத்திரவாதம் செய்யப்பட்டிருக்கிறது. வக்கீல்

(4-ம் பக்கம் பார்க்க)



## எங்கள் மரகத மணி நாட்டை உள்ளன்புடன் நேசிக்கிறேம்

### மக்களின் ஆதரவு பெற்றே மக்கள் சபைக்கு வந்துள்ளோம்

#### ஹிரேன் முகர்ஜி பேச்சு

##### பாக்-இந்திய சமரசம்போல் சீனவுடன் சமரசப் பேச்சு நடத்த வலியுறுத்தல்

புதுடில்லி, நவ. 27—

“இங்கே பேசிய சிலர் கம்யூனிஸ்ட் கட்சியின் மீது அவதூறு கூறினுர்கள். கம்யூனிஸ்ட் கட்சியின் நாட்டுப் பற்றின்மீது அவநம்பிக்கை தெரிவித்தார்கள். ஆனுல் இங்கே, பாராளுமன்றத்தில் வீற்றிருக்கின்ற கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் மக்களின் நம்பிக்கையையும் ஆதரவையும் அன்பையும் பெற்றுத் தான் வந்திருக்கிறுர்கள்.” என்று தோழர். பேராசிரியர் ஹிரேன் முகர்ஜி நேற்று மக்கள் சபையில் பேசுகையில் கூறினுர்.

#### எங்கள் நாட்டுப் பற்று

இந்திய சீன எல்லை விஷயம் பற்றி பண்டித நேரு துவக்கி வைத்த உரையின் மீது இரண்டு நாட்களாக விவாதம் நடைபெற்றது. அவ் விவாதத்தில் பங்கெடுத்துப் பேசுகையிலேயே தோழர் முகர்ஜி மேற்கண்டவாறு கூறினுர்.

அவர் மேலும் பேசுகையில், “இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கம்யூனிஸ்டும் தங்கள் நாட்டு மக்களை நேசிக்கிறுர்கள். தாயகத்தை நேசிக்கிறுர்கள் அலைகடல் சூழ்ந்து, இமயத்தை முடியாகத் தரித்திருக்கின்ற இம்மரகத மணிநாட்டை நேசிக்கிறேம், இந்த உணர்ச்சி எங்கள் உள்ளத்திலும், உடலிலும் ஊறிக்கிடக்கின்றது. ஒவ்வொரு கம்யூனிஸ்டு உறுப்பினனின் உள்ளத்திலும், உடலிலும் ஊறிக்கிடக்கின்றது” என்று கூறினுர்.

#### வெளிநாட்டுக் கொள்கையை வரவேற்கிறேம்

தோழர் முகர்ஜி தொடர்ந்து பேசுகையில் “இங்கே (மக்கள் சபையில்) சிலர் சீனத்தோடு போர் தொடுக்க வேண்டும் என்பது போன்ற கூச்சல்களைப் போட்டதைக் கேட்டேன். இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையை மீண்டும் பரிசீலனை செய்ய வேண்டும் என்ற கூக்குரலைக் கேட்டேன். ஆனுல் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி நேருவின் வெளிநாட்டுக் கொள்கையை வரவேற்கிறது; அவருக்கு தமது ஆதரவைத் தருகிறது. ஏனெனில் கம்யூனிஸ்டுகள் உயர்ந்த அளவில் நாட்டுப்பற்றுல் ஈர்க்கப்பட்டவர்கள்” என்றுர்.

#### பாக். தந்த பாடம்

“எல்லை விஷயத்திற்கு சீனப் பிரதமர் சூ-யென்-லாய் முன் வைத்த யோசனைகளுக்கு நேரு கூறியுள்ள நியாயமான, மதிக்கத் தகுந்த ஆலோசனைகளை வரவேற்கிறேம். இந்திய-சீன உறவு பாதிக்கப்பட்டிருப்பது உண்மையே. அதற்காக மக்கள் நடுநிலைமையினின்றும் ஆராய்கின்ற தன்மையை இழந்துவிடக்கூடாது, கம்யூனிஸ்ட் கட்சி சீனம் சம்பந்தப்பட்ட எல்லை விஷயத்தைமட்டுமல்ல, எல்லாத் தகராறுகளையுமே சமாதானபூர்வமான பேச்சுவார்த்தையின் மூலமே தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறது. இந்தக் கருத்தை இன்றல்ல, 1952ம் ஆண்டு பாகிஸ்தானேடு போர் தொடுக்கவேண்டுமென்று சிலர் கூறியபோதும் வலியுறுத்தி வருகிறது. பாகிஸ்தான் தொடர்ந்து ஆக்கிரமிப்புச் செய்துகொண்டு வந்தபொழுதும் இக்கருத்தைக் கூறி வந்துள்ளோம். இவ்விஷயத்தில் இந்திய அரசாங்கத்தின் கொள்கை சமாதானபூர்வமாக அணுகும் முறை வெற்றிபெற்றிருக்கிறது. அதனுல் நாம் நம்முடைய கௌரவத்தை இழந்துவிடவில்லை. இதனைத்தான் அண்மையில் பாகிஸ்தானேடு ஏற்பட்ட உடன்பாடு நமக்குக் கூறுகிறது. இந்தியா-பாக். உறவு விஷயத்தில் நாம் பெற்ற படிப்பினையை இந்திய-சீன எல்லை விஷயத்திலும் கடைப்பிடிக்க வேண்டும்” என்றுர்.

#### கல்கத்தா சம்பவம்

கல்கத்தா சம்பவம் பற்றி தோழர் முகர்ஜி குறிப்பிடுகையில், “கல்கத்தாவில் நடைபெற்ற ஊர்வலத்தில் தவருன கோஷங்கள் கூறப்பட்டதாக நேரு கூறியதை மறுக்கிறேன். அவருக்கு யாரோ தவருன தகவலைக் கொடுத்திருக்கிறுர்கள். அன்று நடைபெற்ற ஊர்வலத்தைப்பற்றியும், முழக்கிய கோஷங்களைப் பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டுமானுல், கல்கத்தாவிலிருந்து வெளிவரும் தினசரிப் பத்திரிகைகளில் வெளியான செய்திகளைக் கவனமாகப் படித்தாலே போதும். தோழர் ஜோதிபாசு பேசியதாக டில்லிப் பத்திரிகை ஒன்றில் வெளியாகியிருக்கின்ற செய்தி தவருனதாகும். அந்தச் செய்தியை யாரோ நேருவின் கவனத்திற்குக் கொண்டு வந்திருக்கிறுர்கள். கம்யூனிஸ்ட் கட்சிக்கு விரோதமாக வருகின்ற செய்திகளையே நேருவின் காரியாலய ஊழியர்கள் நேருவுக்கு காண்பிக்கிறுர்கள் என்பதற்காக வருந்துகிறேன். பாரபட்சமின்றி, இருதரப்புச் செய்தி

(4-ம் பக்கம் பார்க்க)

## பிரபல திருமணம்

தூத்துக்குடி நகர பிரபல வியாபாரி திரு. ரு.சி.வ. நல்லசிவன் பிள்ளை இளைய குமாரரும் ஞானம் அரிசி ஆலை உரிமையாளருமான திரு. ந. ஆறுமுகம், B.A.க்கும் பொள்ளாச்சி முனிசிபல் எஞ்சினீயர் குமாரி திருமதி கோமதிக்கும் 13-11-59 தேதியன்று பொள்ளாச்சியில் திருமணம் விமரிசையாக நடைபெற்றது. 15-11-59 தேதியன்று தூத்துக்குடியில் மறுவீடு விசேஷமும் சிறப்பாக நடைபெற்றது.

தம்பதிகளை வாழ்த்தி கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் K.T.K. தங்கமணி, M.P., கேவை சிறையில் வாடும் தோழர் K. பாலதண்டாயுதம் தூத்துக்குடி நகர கம்யூனிஸ்ட் தலைவர்கள் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்கள். தமிழ் மகாணக் கம்யூனிஸ்ட் கட்சி கவுன்சில உறுப்பினர் தோழர் S. A. முருகானந்தம் திருமணத்திற்கு நேரடியாகச் சென்று தம்பதிகளை வாழ்த்தினர். தம்பதிகள் தூத்துக்குடி நகரக் கம்யூனிஸ்ட் கட்சி நிதிக்கு நன்கொடை அளித்தார்கள்.

ஜனசக்தி
(தின இதழ்)
சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| வருடம் | 28-00 | 3 மாதம் | 7-25 |
| 6 மாதம் | 14-00 | 1 மாதம் | 2-50 |

சந்தாவுக்கு பணம் அனுப்புவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்கே அனுப்ப கேட்டுக்கொள்கிறேம்.
நிர்வாகி,
ஜனசக்தி, 32, பிராட்வே, சென்னை-1.

ஜனசக்தி

சென்னை 28-11-1959

# பதுக்கல்காரர்களும் பட்டீலின் திட்டமும்

விலைவாசிகள் உயர்வதற்கான அடிப்படையான காரணங்களை ஆராய்ந்து அவைகளுக்கு ஆழமான பரிகாரம் காண்பதற்குப் பதிலாக, மேலெழுந்தவாரியான பேச்சுக்களிலும், பகட்டான திட்டங்களிலும் உணவு அமைச்சர் காலத்தைக் கழிக்கிறார் என்பதற்கு அவர் சில தினங்களுக்கு முன் விலை நிர்ணய போர்டு நியமிப்பது பற்றி அறிவித்த அறிவிப்பு மற்றுமொரு உதாரணம். பல்வேறு உபயோகப் பொருள்களின் விலைகளை நிர்ணயிப்பதே இந்த 'போர்டி'ன் வேலை என்று மந்திரி கூறுகிறார். இத்தகைய போர்டை இன்னும் இரண்டு மாதத்தில் உருவாக்கிவிடப் போவதாகவும் உதவி உணவு அமைச்சர் ஏ. எம். தாமஸ் அறிவித்தார்.

பொருள்களின் விலைகளை நிர்ணயிப்பது அவசியம். இது நியாயமான நிர்ணய விலையாக இருப்பதும் அவசியம். இத்தகைய விலை நிர்ணயம் செய்யும் போர்டு சுயநலக்காரர்களின் செல்வாக்கிற்கு உட்படாதிருத்தலும் அவசியம். இதில் இடம் பெறப் போகும் நபர்கள் மக்களின் இன்றைய வாங்கும் சக்தியை கணக்கிலெடுத்துக் கொள்ளும், மக்கள் நலனைப் பிரதிபலிக்கும் நபர்களாக இருக்க வேண்டுமென்பதும் அவசியம். நிற்க,

விலைவாசிகளை நிர்ணயித்து, அரசாங்க கெஜெட்டுகளில் வெளியிட்டு விட்டால், பொது மக்களுக்கு நிர்ணயித்த விலைகளில் பொருள்கள் கிடைத்துவிடும் என்று நினைப்பது பகற்கனவாகும்.

நியாயமான விலைகளை அரசாங்கம் நிர்ணயித்து விடுவதின் மூலம் மக்களுக்கு அந்த விலைகளில் பொருள்கள் கிடைத்து விடும் என்று உணவு அமைச்சர் பட்டீல் உண்மையில் நம்புகிறாரா? அல்லது இன்று மார்க்கெட்டில் நிலவும் உயர்ந்த விலைகளையே அரசாங்கத்தின் நிர்ணயவிலை என்று அறிவித்து கள்ள மார்க்கெட்டிற்கு சட்டபூர்வமான உருவம் கொடுக்கவிரும்புகிறாரா? உண்மையில் நியாய விலை நிர்ணயிப்பது தான் அரசாங்கத்தின் நோக்கமென்றால், சகலருக்கும் பொருள்கள் கிடைக்கும் விதத்தில் அதற்கான சகல ஏற்பாடுகளையும் அரசாங்கம் செய்யத் தயாரா? தயாரென்றால் அதற்கான திட்டமென்ன? பட்டீல் அறிவிக்கவில்லையே!

நிர்ணயமான நியாயமான விலையில் மக்களுக்கு உணவும் ஏனைய பண்டங்களும் கிடைக்க வேண்டுமானால், அரசாங்கமே பிரதானமான பண்டங்களை குறிப்பாக உணவுப் பண்டங்களைக் கொள்முதல் செய்து விற்பனை செய்ய முன் வந்தாலன்றி, நிர்ணய விலை அறிக்கைகளினால் யாதொரு பயனும் ஏற்படாது என்பதை உணர்ந்தாரா? அவர் உணராதது மட்டுமல்ல, விலை நிர்ணயம் வெற்றியடைவதற்கு அடித்தளமாக உள்ள அரசாங்க வர்த்தகம் என்ற கொள்கையை அமுல் நடத்தாமல், அதை அடியோடு கைவிடும் நோக்கத்துடனேயே இன்று இந்த வெளிப்பூச்சு வேலையில் இறங்கி இருக்கிறார் என்பது தெளிவு.

நியாய விலைகளை நிர்ணயிப்பதுடன் அவ் விலைகளில் பொருள்கள் மக்களுக்குக் கிடைக்கும் ஏற்பாட்டைசெய்யாவிடில் அதாவது அரசாங்க வர்த்தகத்தை மேற்கொள்ளாவிடில் விலை நிர்ணயமாகும் அத்தனை பொருள்களும் கள்ள மார்க்கெட் பகாசுரன் கையில் சிக்கி விடும் என்பதை அரசாங்கம் தெரிந்து கொள்ளட்டும்.

இந்தக் [illegible] நியாய விலை நிர்ணயம் என்பதே கூடாது என்று

ஏகபோக முதலாளிகளும் பெரு வியாபாரிகளும் உணவுச் சூதாடிகளும் அவர்களது குரலாக விளங்கும் சுதந்திரக் கட்சியினரும் கூக்குரலிடுவர். அதைக் கேட்டு அமைச்சர் பட்டீல் நியாய விலை நிர்ணயத்தால் பயனில்லை என்று அதையும் கைவிடுவார்.

இன்று விலைவாசி உயர்வுக்கு அடிப்படையான முக்கியமான காரணம் பதுக்கல்காரர்கள்தான் என்பதை அரசாங்கம் ஏற்று நடவடிக்கை எடுக்க முன்வந்தாலல்லாது பட்டீல் அறிவித்துள்ள திட்டங்கள் போன்று ஆயிரம் திட்டங்கள் கொண்டு வந்தாலும் விலை உயர்வைக் கட்டுப்படுத்த முடியாது.

# நடுநிலைமைக் கொள்கையின் எதிரிகள்: நேரு இவர்களைத்தான் கண்டித்தார்

**இந்திய சர்க்காரின் நடுநிலைமை, பஞ்ச சீலக் கொள்கைகளுக்கு வேட்டு வைக்கும் பணியில் அமெரிக்க-பிரிட்டிஷ் ஏகாதிபத்யங்கள் முழுமூச்சுடன் இறங்கியுள்ளன. இந்திய-சீன எல்லைத் தகராறை சமரசப் பேச்சு மூலமே தீர்த்துக் கொள்ள இந்திய சர்க்காரும் சீன சர்க்காரும் நடவடிக்கைகள் எடுத்து வரும்போது, அமெரிக்க-பிரிட்டிஷ் ஏகாதிபத்ய வாதிகள் 'சீனமீது இந்தியா போர் தொடுக்க வேண்டு'மென்று தூபம் போட்டு வருகிறார்கள்.**

**அவர்களின் குரலை அப்படியே காப்பியடித்து, இந்தியப் பெருமுதலாளிகளின் பத்திரிகைகளும் வெறியாட்டம் ஆடுகின்றன. சீனம் இந்தியாமீது படையெடுக்கப் போவதாக பயபீதிப் பிரச்சாரத்தைக் கட்டவிழ்த்து விட்டு, சீனமீது போர் தொடுக்க வேண்டுமென்று கொக்கரிக்கின்றன. நேருவையும் மேனனையும், இந்திய சர்க்காரின் நடுநிலைமைக் கொள்கையையும் மூர்க்கமுடன் தாக்குகின்றன.**

எல்லைத் தகராறைத் தீர்க்க இந்திய சர்க்காருடன் பத்திரிகைகள் ஒத்துழைக்கவில்லை யென்றும், எல்லைப் பிரச்னையில் காங்கிரஸ் கட்சியின் தீர்மானத்தை திரித்து வெளியிட்டதாகவும் நேரு கண்டித்ததும் இந்த முதலாளி பத்திரிகைகளைத்தான். இந்த பத்திரிகைகள் மீதுதான் காங்கிரஸ் கட்சி கண்டனத் தீர்மானம் நிறைவேற்றியது,

அண்டை நாடான சீனத்தின் 65 கோடி மக்களுடனும் 2500 மைல் நீள எல்லையில் சர்வசதா போரிட்டுக்கொண்டும், பகைத்துக்கொண்டும் தான் இருக்க வேண்டுமென்றும், நேசர்களாக இருக்க முடியாது என்றும் இப்பத்திரிகைகளின் உள்நோக்கத்தை பொது மக்கள் புரிந்துகொண்டு உஷாராக இருக்க வேண்டும். முதலாளிப் பத்திரிகைகள், இந்திய சர்க்காரின் கொள்கையையும், நேருவையும் மேனனையும் எப்படித் தாக்குகின்றன என்பதைப் படியுங்கள்:

### நேருவை எதிர்க்க வேண்டுமாம் தமிழ்நாடு கூறுகிறது

தமிழ் நாட்டிலேயே மிகப் பெரிய பணக்காரரும், 20, 30 மில்களுக்கு முதலாளியுமான கருமுத்து தியாகராசரின் தமிழ்நாடு பத்திரிகை 24-11-59ல் 'பீடன்று' என்று தலைப்பிட்டு எழுதிய தலையங்கத்தில், "திரு. நேரு சீனத் தலைமையமைச்சருக்குக் கூறியிருக்கும் மாற்று ஆலோசனைகள் மூலம், நாட்டை எதிர்பாராப் பெரும் ஏமாற்றத்தில் ஆழ்த்தியுள்ளார்" என்றும், முதலாவதாக சீனப் படைகள் மக்மகோன் கோட்டிற்கு கிழக்கே திரும்பிவிடுமாயின், 1956-ல் அவர்கள் வெளியிட்டுள்ள நிலவரைப் படத்தில் தமக்குரியனவாகக் காட்டியிருக்கும் பகுதிகள் அனைத்திலிருந்தும் இந்தியா தனது காவல் வீரரை வெளியேற்றிக் கொள்ளும் எனத் திரு. நேருவின் மாற்றுக் கருத்து அறிவிக்கிறது......நாம் அவற்றிலிருந்து வெளியேறினால் ஆண்மையற்றவர்கள் என்ற பழிப்பிற்கு ஆளாவோம்" என்றும், "சீனாவின் குறிக்கோள் மிக எளிதாக நிறைவேறக்கூடிய ஒரு சூழ்நிலையையே திரு நேருவின் மாற்று ஆலோசனைகள் தோற்றுவிக்கும்" என்றும், "பாராளுமன்றத்தில் நேருவின் குறைகளை எடுத்துக்காட்டும் நெஞ்சுரம் காங்கிரசு உறுப்பினர்களுக்கு வாய்க்கப் பெறவில்லை" என்றும் எழுதியிருக்கிறது.

### நேருவுக்கு கீழிடம்தானாம்! நவ இந்தியா பாய்ச்சல்

கோவை மில் முதலாளிகளின் குரலான நவ இந்தியா பத்திரிகையின் சென்னைப் பதிப்பு 26-11-59 தேதியில் 'கருத்தும் செயலும்' என்று தலைப்பிட்டு தீட்டியுள்ள தலையங்கத்தில் சீனாவுக்கும் இந்தியாவுக்கும் 2000 வருடங்களாக அரசியல் துறையில் நட்புறவு இருந்து வந்ததா இல்லையா என்பதைபற்றிய ஆராய்ச்சி ஒருபுறமிருக்கட்டுமென்றும் இன்றைய செஞ்சீன சர்க்காரும் சமுதாய அமைப்பும் முன்னேய சீன முறைகளிலிருந்து பெரிதும் வேறுபட்டிருக்கின்றன என்பதையும் நமது நாட்டு முறைகளிலிருந்தும் வெகுவாக மாறுபட்டுள்ளன என்பதையும் மறந்துவிடக் கூடாது என்றும், எழுதியுள்ளது. மேலும், "எவரையும் குறை சொல்ல வேண்டியதில்லையென்றும், குறைகள் இருந்தால் அவற்றுக்கு தாமே காரணம் என்றும் அவர் சொல்லிவிடுவதால் அதன் கனம் குறைந்துவிடுவதில்லை யென்றும். நேரு ஒப்பற்ற தலைவரென்றாலும் நாடெங்கிலும் கட்சி என்று எடுத்துக்கொண்டால் அவற்றின் முன்னால் தனிப்பட்டவர் எவ்வளவு பெரிய அரசியல் தலைவராயினும் கீழிடம்தான் பெற முடியும்" என்றும் கூறிவிட்டு, 'இதர நாடுகள் தனக்கு உதவ வேண்டுமென்று இந்தியா ஐ. நா. சபைக்கு முறையிட வேண்டுமென்றும் தலையங்கம் எழுதியுள்ளது.

**இருநாட்டுப் பிரதமர்களும் கூடிப் பேச வேண்டும் என்பதை துரோகம் என்கிறது முதலாளிக் குரல்.**

சீனா சமாதானத்தையே நாடுகிறது என்றும், இருநாட்டுப் பிரதமர்களும் கூடிப் பேச வேண்டுமென்றும் கூறும் கம்யூனிஸ்டுகளைப் பற்றி 24-11-59 நவ இந்தியா "ஐந்தாம் கும்பல்" என்று தலைப்பிட்டு, "இந்தியக் கம்யூனிஸ்டுகளும் தேசீயப்பற்றுள்ளவர்கள் தான் என்று இன்னும்கூடக் கூறுகிற வர்கள் இனியாகிலும் தங்கள் கருத்துக்களைத் திருத்திக் கொள்வார்கள் என்பதில் ஐயமில்லை" என்றும், "மீரட்டில் இரட்டை வர்ணத் தீர்மானம் நிறைவேற்றி இந்திய மக்களை வஞ்சிக்க முயன்ற இவர்களின் வேஷம் இப்போது கலைந்துவிட்டதென்றும், 'வெளிப்படையாகவே சீனக் கம்யூனிஸ்டுகளுக்கு வக்காலத்து வாங்கும் அளவிற்கு துணிந்துவிட்டனரென்றும், யுத்தப் பித்துப் பிடித்துள்ள சீனத் தலைவர்களின் ஏகாதிபத்திய வெறிக்குத் தூபம் போடும் இந்த இந்தியக் கம்யூனிஸ்டுகள் நெருக்கடியான ஒரு கட்டத்தில் நாட்டைக் காட்டிக் கொடுக்க முயலும் "ஐந்தாம் படைக் கும்பல்" என்றும் "சீனர்கள் ஏற்படுத்தியுள்ள யுத்த அபாயம்தான் தற்போதைய விலைவாசி உயர்வுக்கு ஒரு முக்கிய காரணமென்றும், சர்வகட்சிக்காரர்கள் விலைவாசி உயர்வுக்கு ஜோடனையான காரணங்கள் கற்பித்து அரசாங்கத்தின் மீது வீண் பழி சுமத்துவதாகவும்" தலையங்கம் எழுதியுள்ளது.

### கோயங்காவின் எக்ஸ்பிரஸ்

இந்தியாவின் முக்கிய நகரங்களில் ஆங்கிலத்திலும், தெலுங்கிலும், தமிழிலும் அநேக பத்திரிகைகள் நடத்திக்கொண்டிருக்கும் பெரு முதலாளி கோயங்காவின் இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகை இந்திய சர்க்கார் அசையாமல் இருந்தால்தான் சீனாவை மடக்க முடியுமென்றும், நேரு சூஎன்-லாயுடன் பேச்சுவார்த்தை நடத்துவதை எதிர்த்தும் எழுதியுள்ளது.

# இந்திய-சீன எல்லைத் தகராறு: பேச்சுவார்த்தை மூலமே தீர்வு

## மக்கள் சபையில் ஜோக்கிம் ஆல்வா வற்புறுத்தல்

புதுடில்லி, நவ. 25—

"பிரதமர் நேரு சீனப் பிரதமருக்குக் கடைசியில் எழுதிய கடிதம் நேசப்பான்மை மிக்கது. நேருவின் ஆலோசனைகளை முழுதுமாகச் சீனப் பிரதமர் ஏற்காமல் மாற்று யோசனைகளை வெளியிடலாம். ஆனால் ஒரு உடன்பாடு காணும் வரை சமரசப் பேச்சுவார்த்தைகள் தொடர்ந்து நடைபெற வேண்டும்" என ஜோகிம் ஆல்வா (காங்-மைசூர்) கூறினார். சீன-இந்திய உறவுகள் பற்றிய மக்கள் சபைவிவாதத்தில் கலந்துகொண்டு பேசுகையிலேயே அவர் மேற்கண்டவாறு கூறினார்.

அவர் சமீபத்தில் சீனத்தில் சுற்றுப்பயணம் செய்தது பற்றிக் குறிப்பிடுகையில், மாசேதுங்—சூயென்-லாய் ஆகியோரைத் தாம் சந்தித்ததாயும் தகராறைத் தீர்க்க நேசபூர்வமான பேச்சுவார்த்தைகள் தொடங்குவதில் அவர்கள் அதிக அக்கறைக் காட்டினர் எனவும் ஆனால் லடாக் சம்பவத்துக்குப் பின்னர் எல்லாம் மாறிவிட்டதெனவும் ஆல்வா கூறினார்.

"நமது எல்லைப் பிரச்சினையைப் பேச்சுவார்த்தைகள் மூலமே தீர்க்க வேண்டும். அதற்குச் சில ஆண்டுகள் பிடிக்கலாம். அதுவரை நிலைமையை நாம் நேசபூர்வமானதாக இருக்கச் செய்ய வேண்டும். யுத்தத்தைப் பற்றிப் பேசுவது எளிது; ஆனால் அதன் விளைவுகள் மிகவும் நாசகரமானதாகவிருக்கும்" என ஆல்வா கூறினார்.

அரசாங்கத்தின் உள்நாட்டுக் கொள்கைகளையும் வெளிவிவகாரக் கொள்கைகளையும் தாக்கும் மசானியையும் சுய முயற்சி அரங்கத்தையும் ஆல்வா கண்டித்தார். "ஒரு தேசீய நெருக்கடியின் போது நமது பிரதமருக்கு நாம் பக்கபலமாக இருக்க வேண்டும்" என்று ஆல்வா கூறினார்.

### பெரு முதலாளிப் பத்திரிகைகளை பறிமுதல் செய்யவேண்டும்

### சீனத்தைவிட இவைகள்தான் ஆபத்து

புதுடில்லி, நவ. 25—

இந்திய சர்க்காரின் அயல் நாட்டுக் கொள்கையை (பஞ்சசீலக் கொள்கையை) இந்தியாவின் பெருமுதலாளிப் பத்திரிகைகளெல்லாம் கடுமையாக எதிர்க்கின்றன அல்லவா! அப்பத்திரிகைகளையெல்லாம் சர்க்கார் பறிமுதல் செய்ய வேண்டுமென்ற யோசனை முதல், பத்திரிகைகளுக்கு அனுபவமில்லையாதலால் அவைகளுக்குப் பயற்சியளிக்க வேண்டுமென்ற யோசனை வரை சகல யோசனைகளும் நேற்றைய லோகசபைக் கூட்டத்தில் தெரிவிக்கப்பட்டன.

சீனாவிடமிருந்துவரும் அபாயத்தைவிட, ஒரே முதலாளிக்குச் சொந்தமான சங்கிலித் தொடர் (பல) பத்திரிகைகளால்தான் இந்த நாட்டுக்கு அபாயம் அதிகமாக வருகிறது என்று காங்கிரஸ் உறுப்பினர் ஜோக்கிம் ஆல்வா உரத்தகுரலில் ஆணித்தரமாகப் பேசினார்.

சங்கிலித் தொடர் பத்திரிகைகளை, அதாவது ஒரே முதலாளிக்குச் சொந்தமான அநேக பத்திரிகைகளை தேசவுடைமையாக்க வேண்டுமென்றும் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் கூட லோகசபை மெம்பர்கள் பேசினார்கள்.

### லால்பகதூர் சாஸ்திரி ஓய்வு முடிந்து திரும்பினார்

புதுடில்லி, நவ. 26—

மத்திய சர்க்காரின் வர்த்தக, தொழில் துறை அமைச்சர் திரு. லால்பகதூர் சாஸ்திரி, ஏழுவாரங்களுக்கு முன்னால் ஹிருதயத் தாக்குதலின் காரணமாக அலகாபாத்தில் ஓய்வுபெற்றுக்கொண்டிருந்தவர், இன்று பிற்பகலில் தலைநகருக்குத் திரும்பினார். அவர் ஒரு விசேஷ விமானத்தில் வந்தார். திரு. சாஸ்திரி மகிழ்ச்சியுடன் காணப்பட்டார்.

# மசானி கும்பலுக்கு மூக்கறுந்தது

## மக்கள் சபையில் நேருவின் பதில்

புதுடில்லி, நவ. 25—

பிரதமர் நேரு இந்திய-சீன எல்லைத் தகராறு பற்றிய விவாதத்தை ஆரம்பித்து வைத்து ஆற்றிய சொற்பொழிவின்போது மசானியின் போக்கை வன்மையாகக் கண்டித்தார். அதே போன்று யுத்த பீதியை உண்டுபண்ணுபவர்களையும் கடுமையாக எச்சரித்தார்.

சீனப்பிரதமர் சூ-என்-லாய்க்கு பிரதமர் நேரு எழுதியுள்ள கடிதம் பற்றி குறிப்பிடுகையில் நியாயமான முறையில் எழுதப்பட்ட கண்யமான கடிதம் இது என்றார். நீங்கள்யுத்தத்தைவிரும்பினால்தான் வீணான கடுமையான வார்த்தைகளை உபயோகிக்க நேரிடும் என்று குறிப்பிட்டுவிட்டு அப்படிப்பட்ட கொள்கையைத் தான் விரும்பவில்லை என்றும், இது தவறான கொள்கை, மிகவும் ஆபத்தான கொள்கை என்றும் பிரதமர் குறிப்பிட்டார்.

யுத்தம் என்பதே வேறு பிரச்சினை. இந்தியா மீது போர் தொடுக்கப்படுமெனில் நிச்சயமாக இந்தியா தன் முழு பலத்தையும் உபயோகித்து யுத்தம் செய்யும். ஆனால் இப்போது சகல வழிமுறைகளையும் உபயோகித்து யுத்தத்தைத் தவிர்க்க முயற்சிக்க வேண்டும். ஏனென்றால் யுத்தம் என்பது மிகவும் மோசமான ஒன்றாகும், ஆபத்தானதும் கூட என்றார்.

### மசானிக்கு சூடு

இந்த நேரத்தில் பிரதமர் நேரு திரு. மசானியின் பக்கம் திரும்பினார். "மசானி இதைக் கேட்டு புன்முறுவல் செய்கிறார். ஏனெனில் அவர் நம்மைவிட வேறு வித சிந்தனை செய்கிறார். அவர் யுத்தத்தைப் பெரிதும் விரும்புகிறார். ஏனெனில், வேற்று நாடுகளிலுள்ள அவரது நண்பர்கள் இந்தியாவுக்கு இந்த வகையில் உதவ முன்வருவார்கள் என்று அவர் எதிர்பார்க்கிறார்" என்று குறிப்பிட்டார்.

இந்தியா பலம் குறைந்த நாடு என்று எண்ணக்கூடிய அளவில் பிரச்சாரம் செய்து, அந்நிய நாட்டு உதவி தேவை என்று தினம் தினம் கூச்சல்போடும் போக்கை பிரதமர் கடுமையாக எச்சரிக்கை செய்தார்.

இவ்வாறு அந்நிய நாட்டு உதவியை இந்தியா என்றைக்கு ஏற்றுக் கொள்கிறதோ அன்றைய தினமே இந்தியா தன் கௌரவத்தையும், மதிப்பையும் இழந்துவிடும் என்றார்.

இந்த நேரத்தில் குறுக்கிட்ட மாசனி: 'எந்த விதமான அடிப்படையும் இல்லாமல் பிரதமர் இப்படிப்பட்ட முடிவுக்குத் திடீரென்று வந்துவிடக் கூடாது. இப்படிப்பட்ட முட்டாள்தனமான ஆலோசனைகள் எதுவும் கூறப்பட்டால் சிரிப்பதற்கு எல்லா உறுப்பினர்களுக்கும் உரிமை உண்டு" என்றார்.

மசானியின் இந்தக் கொள்கையைப்பற்றி மசானியின் புன்முறுவலிலிருந்து மட்டுமல்ல, மசானி கொண்டுள்ள பரந்த நோக்கத்தைப்பற்றியும். அதைப்பற்றி அவர் பொது மேடைகளில் பேசியதுபற்றியும் தெரிந்தபின்னர்தான் இவ்வித தீர்மானத்திற்கு வரமுடிந்தது என்று நேரு குறிப்பிட்டார்.

ஹிட்லரிடத்திலும், நாஜிக் கொள்கையிலும் உள்ளடங்கியிருந்த யுத்த மனப்பான்மையைக் கடைபிடிப்போர்பற்றி அங்கத்தினர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்று பிரதமர் கேட்டுக்கொண்டார். ஹிட்லர் தோற்கடிக்கப்பட்டபோதும் அவனுக்கு யுத்த வெறியுடன் நடப்பதற்கு அப்போது பலம்இருந்தது.

ஆனால், அவ்வித நிலைமையும் பலமும் இல்லாமல் இங்கே ஹிட்லரைப் போல் பேசுகின்ற மக்களைத் தான் பார்ப்பதாகக் குறிப்பிட்டார்.

இது போன்றவை தவிர்க்கப்பட வேண்டும், ஏனெனில் ஒரு நாட்டிலுள்ள மக்களுக்குவிரோதமாக அடுத்த தேசத்து மக்களுக்கு அளவுக்கு மீறிய ஆத்திரம் ஏற்படும். இதுநீங்கள் விரும்பினாலும், விரும்பா விட்டாலும் படிப்படியாக ஒரு தேசத்தை யுத்த கெடுபிடிப்பாதையில் இட்டுச் செல்வதாகும் என்று எச்சரிக்கை செய்தார்.

### முஸ்லீம் லீகர்களுக்கும் ராஜாஜி அழைப்பு

### சுதந்திரக் கட்சியில் சேரும்படிக் கூறுகிறார்!

திருநெல்வேலி, நவ. 24—

இங்கு மேலப்பாளையத்தில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில் ராஜாஜி. முஸ்லீம் லீகர்களையும் சுதந்திரக் கட்சியில் சேரும்படி கேட்டுக்கொண்டார்.

சுதந்திரக் கட்சியின் கதவுகள் எல்லோருக்கும் திறந்து வைக்கப்பட்டுள்ளன. ஆகவே முஸ்லீம் லீகர்களும் அதில் சேரலாம் என்றார்.

இதற்கு முன்னதாக திருநெல்வேலி டவுனில் முத்துராமலிங்கத் தேவரின் பிறந்த நாள் கொண்டாட்டக் கூட்டமொன்றில் பேசுகையில், ராஜாஜியும், என். ஜி. ரங்காவும், தேவர் போன்றவர்களும் சுதந்திரக் கட்சியில் வந்து சேரவேண்டுமென்று அழைப்பு விடுத்தனர்.

# சீன-இந்தோனேஷிய நல்லுறவு நிலைநிறுத்தப்படும்

## டாக்டர் சுபாந்திரியோ அறிவிப்பு

ஜகர்தா, நவ. 25—

எந்தச் சூழ்நிலையிலும் இந்தோனேஷியா சீனாவுடன் நட்புறவாகவே இருக்கும்; ஆனால் அது தன்னுடைய சொந்த தேசீய நலன்களை விட்டுக்கொடுக்காது என்று இந்தோனேஷியா வெளிவிவகார அமைச்சர் டாக்டர் சுபாந்திரியோ இன்று கூறினார்.

சீனாவுடன் தனக்குள்ள வேறுபாடுகளை இந்தோனேஷியா, பாந்துங் மகாநாட்டின் பத்து கோட்பாடுகளினடிப்படையிலும் அண்மையில் சீன வெளிவிவகார மந்திரி சென்-யீயும் தானும் சேர்ந்து வெளியிட்ட கூட்டறிக்கையின் அடிப்படையிலும் தீர்த்துக்கொள்ள இந்தோனேஷிய சர்க்கார் விரும்புகிறது என்று டாக்டர் சுபாந்திரியோ, இந்தோனேஷியப் பார்லிமெண்டில் இன்று அறிவித்தார்.

இந்தோனேஷியாவின் கிராமப் பகுதிகளில் உள்ள வெளிநாட்டு வர்த்தகர்கள் தங்கள் கடைகளை மூடிவிடவேண்டும் என்றும், அவர்கள் சர்க்கார் குறிப்பிடும் பிரதேசங்களுக்குச் செல்ல வேண்டுமென்றும் அண்மையில் இந்தோனேஷிய சர்க்கார் பிறப்பித்த உத்திரவால் இந்தோனேஷியா-சீனா உறவில் சிக்கல் ஏற்பட்டுள்ளது. ஏனெனில் அத்தகைய வர்த்தகர்களில் பெரும்பாலோர் சீனர்கள். இந்த உத்திரவு சம்பந்தமாக சீனா தன் ஆட்சேபத்தைத் தெரிவித்திருப்பதாகத் தெரிகிறது.

### ஐ. நா. பந்தோபஸ்துக் கவுன்சில் விஸ்தரிப்பு ஒத்திவைக்கப்பட்டது

நியூயார்க், நவ. 25—

பந்தோபஸ்துக் கவுன்சில் உறுப்பினர் தொகையை அதிகரிப்பது சம்பந்தமான ஆலோசனையை ஐ நா. பொதுச் சபை மேலும் ஒரு வருடத்திற்கு ஒத்திவைத்தது. பந்தோபஸ்து கவுன்சிலில் பிரதிநிதித்துவத்திற்கு வாயக்கற்ற கோமிண்டாங் சீனா இருப்பதையும், 60 கோடி மக்களின் நவசீனா உறுப்பினராக இல்லாதிருப்பதையும் ஆட்சேபத்துக்குரியதென சோவியத் யூனியன் சுட்டிக் காட்டியதை ஒட்டி இந்த ஒத்திவைப்பு ஏற்கப்பட்டது.

### கிழக்கு பாக்-இந்திய எல்லையில் இருதரப்பிலும் 150 கெஜம் வாபஸ்

கரீம்கஞ்ச், நவ. 25—

• கிழக்கு பாகிஸ்தானின் அஸாம் சில்ஹட் ஜில்லாக்களை யொட்டிய எல்லைப் பிரதேசமான பதாரியா குன்று பகுதிகளில் பாகிஸ்தான் படைகளும் இந்தியப் படைகளும் தத்தம் தரப்பில் 150 கெஜம் பின் வாங்க வேண்டுமென்று இருநாட்டு சேனைத் தலைவர்களும் ஒப்பந்தம் செய்து கொண்டனர்.

மதன்பூர் தேயிலைத் தோட்டங்களில் சென்ற வருடம் தொடர்ந்து துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது.

இந்த ஒப்பந்தப்படி, கரீம்கஞ்ச் பகுதியில் 29 கிராமங்கள் பாகிஸ்தானுக்குப் போகின்றன. இது ராட்கிளிப் தீர்ப்பாம்.

# சீனா படையெடுக்கப் போவதாக பத்திரிகைகள் பரப்பிய பீதியை போக்குவதே காங்கிரஸார் கடமை

## காங்கிரஸ் எம். பி. ஹார்வானி கருத்து

புதுடில்லி, நவ. 25—

பி. சோ.வும், ஜனசங்கமும், சுதந்திரக் கட்சியும் பெருமுதலாளிப் பத்திரிகைகளும் இந்திய அயல்நாட்டுக் கொள்கையைத் திரித்துக்கூறி, "இந்தியாமீது சீனா படையெடுக்கப் போவதாக ஒரு பயங்கரப் பீதியையும் கிளப்பிவிட்டிருக்கின்றன. நாட்டிலே அனாவசியமாகப் பரப்பப்பட்ட இந்த பீதியையும் பொய்ப் பிரச்சாரங்களையும் எதிர்த்துப் பிரச்சாரம் செய்ய வேண்டியது ஒவ்வொரு காங்கிரஸ்வாதியின் கடமையாகும். அவர்கள் பரந்த அளவில் சுற்றுப் பயணம் செய்து பிரச்சாரம் செய்து உண்மையை விளக்க வேண்டும்" என்று காங்கிரஸ் எம்.பி. அன்ஷர் ஹார்வானி கூறினார்.

காங்கிரஸ் எம்.பி களின் கூட்டத்தில் அவர் மேலும் பேசுகையில், "1948ம் வருடம் பாகிஸ்தானுக்கு இந்தியாவை விற்றுவிடுவதற்கு காந்திஜி பண்டித நேருவை தூண்டினாரென்று பிரச்சாரம் செய்யப்பட்டது. காந்திஜி மீது அன்று பழி சுமத்திய மாதிரியே, சீனாவுக்கு இந்தியாவை விற்றுவிட வி. கே. கிருஷ்ணமேனன் பிரதமர் நேருவைத் தூண்டி வருவதாக இன்று மேனன் மீதுபழி சுமத்தி வருகிறார்கள் இதை எதிர்த்துப் பிரச்சாரம் செய்யவேண்டியது ஒவ்வொரு காங்கிரஸ் வாதியின் கடமையாகும்" என்றார்.

# ஆப்கானிஸ்தான் எந்த ராணுவ கூட்டணியிலும் சேராது

## ஆப்கன் தூதர் விளக்கம்

லண்டன், நவ. 25—

ஆப்கானிஸ்தானம் எந்த ஒரு ராணுவஒப்பந்தத்திலும் சேராது என்று ஆப்கானிஸ்தான் ஸ்தானிகராலயம் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

ஆப்கானிஸ்தானத்தின் வெளிவிவகார மந்திரி மகமது நியாம் நேற்று காபூலில் ஆற்றிய சொற்பொழிவு இந்த அறிக்கையில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அதாவது ஆப்கானிஸ்தானத்தின் வெளிநாட்டுக் கொள்கை மிகவும் தெளிவாக உள்ளது. அப்கானிஸ்தானம் எந்த ஒரு ராணுவ ஒப்பந்தத்திலும் கூட்டுச் சேரப் பிரியப்படவில்லை. ஏனெனில் உலகத்தில் சமாதானம் நிலவவேண்டுமென்ற நடுநிலைமைக் கொள்கையை லட்சியமாகக் கொண்டுள்ளது, ஆப்கானிஸ்தானத்தின் கொள்கை என்று அவர் குறிப்பிட்டிருந்தார்.

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

### குழந்தைகள் விடுதியின் போக்கு

ஐயா,

நெல்லை ஜில்லா கல்யாணிபுரத்தில் மதர் சுப்பிரியர் தலைமையில் ஆர். சி. உயர்நிலைத் தொடக்கப் பள்ளி உள்ளது. இதில் சுமார் 200 குழந்தைகள் படித்து வருகிறார்கள். பெற்றோரிடம் தலைக்கு 8 ரூபாயும், சர்க்காரிடம் 8 ரூபாயும் பள்ளி நிர்வாகம் பெறுகிறது. ஆனால் குழந்தைகள் சரிவர நடத்தப்படுவதில்லை. எண்ணெய் தண்ணீர் காணாது தவிக்கின்றன. போதிய போஷாக்கு இல்லை. பள்ளியை விட்டுப் பிள்ளைகளை பெற்றோர் அழைத்துக்கொண்ட பிறகும் இவர்கள் பேரில் சர்க்கார் உதவி வாங்கப்படுவதாகச் சொல்லப்பட்டு வருகிறது. சர்க்கார் விசாரித்து நடவடிக்கை எடுக்கக் கோருகிறேன்

அந்தோணிசாமி,
தூத்துக்குடி.

### சர்க்கார் உத்தரவால் வியாதியஸ்தர் அவதி

ஐயா,

உடங்குடி பஞ்சாயத்தைச் சேர்ந்த காலன் குடியிருப்பில் ஜில்லா போர்டு பிரசவ ஆஸ்பத்திரி ஒன்றுள்ளது. இந்த ஆஸ்பத்திரியில் ஒரு லேடி டாக்டரும் ஒரு கம்பவுண்டரும் வேலை செய்கிறார்கள். ஐந்து, ஆறு மைல் சுற்றுவட்டாரத்தில் வேறு ஆஸ்பத்திரி இல்லாததால் பல கிராமங்களிலிருந்தும் இந்த ஆஸ்பத்திரிக்குத்தான் பெண்களும், குழந்தைகளும் சிகிச்சைக்காகவும் பிரசவத்திற்காகவும் வருகிறார்கள்.

சமீபத்தில் இந்த ஆஸ்பத்திரியில் வேலை பார்க்கும் லேடி டாக்டர் வாரத்திற்கு இரண்டு தினங்கள் காலன் குடியிருப்பிலிருந்து 2 மைல் தொலைவிலுள்ள சீக்காய்ச்சி என்ற ஊருக்குச் செல்ல வேண்டுமென்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்துள்ளது. இதனால் காலன்குடியிருப்பு ஆஸ்பத்திரிக்கு வரும் வியாதியஸ்தர்கள் மிகவும் கஷ்டத்துக்குள்ளாகியிருக்கின்றனர். ஆபத்தான பிரசவ கேஸ்களும் இதர கேஸ்களும் வரும்போது லேடி டாக்டர் இல்லாதிருந்தால் ஏழை மக்கள் என்ன செய்வார்கள்? லேடி டாக்டர் ஊரில் இல்லாத நாட்களில் கம்பவுண்டரே மருந்துச் சீட்டைப் பதிவு செய்து, மருந்து கலக்கிக் கொடுப்பதாலும் தினம் நூற்றுக்கணக்கான பேர் சிகிச்சை பெறுவதாலும் காலதாமதம் ஏற்பட்டு இரவு 7, 8 மணி வரையாகிவிடுகிறது. 5,6 மைல் தொலைவிலுள்ள கிராமங்களிலிருந்து வரும் பெண்கள்இரவில்வீடு திரும்புவது எப்படி? மருத்துவ மனையில் தங்கியிருக்கும் கர்ப்பிணிகளுக்கு டாக்டர் இல்லாத வேளையில் பிரசவம் நேரிட்டால் என்ன செய்வது? லேடி டாக்டர் இல்லாத நாட்களில் புதிய வியாதியஸ்தர்கள் வந்தால் அவர்கள் திரும்பிப் போவதா? ஆபத்தான நிலையிலுள்ள வியாதியஸ்தர்கள் வந்தால் அவர்களின் கதி என்ன? இக்காரணங்களால் லேடி டாக்டர் நிரந்தரமாக இந்த ஆஸ்பத்திரியில் தங்கியிருக்க வேண்டியது அவசியம் அல்லவா? எனவே சர்க்கார் தங்கள் உத்தரவை மாற்றிக்கொண்டு காலன்குடியிருப்பு ஆஸ்பத்திரி லேடி டாக்டர் நிரந்தரமாக் மருத்துவ மனையில் இருப்பதற்கு ஏற்பாடு செய்வார்களா? சீக்காய்ச்சியில் வேண்டுமானால் அரசாங்கம் வேறொரு லேடி டாக்டரை நியமித்துக் கொள்வதே நியாயமாகும்.

எஸ். சிங்காரப்பாண்டியன்,
உடன்குடி.

### லேடி டாக்டர் வேண்டும்

ஐயா,

சோழவந்தான் வட்டாரத்தில் 30 ஆயிரம் மக்கள் வசிக்கிறார்கள். சோழவந்தானில் ஒரு லோக்கல்பண்டு ஆஸ்பத்திரி மட்டும் இருந்து வருகிறது. இந்த ஆஸ்பத்திரிக்கு நூற்றுக்கு மேற்பட்ட ஆண்களும், பெண்களும் வைத்தியத்திற்காகவருகிறார்கள். 12-5-59 தேதிவரை ஒரு டாக்டரும், ஒரு பெண் டாக்டரும் இருந்தார்கள். பின்னர் ஆண் டாக்டரை மாற்றிவிட்டார்கள். அதற்குப் [illegible] ஒரு ஆண் டாக்டர் [illegible]. 23-10-59ந் தேதியில் இங்கு இருந்து வந்த பெண் டாக்டரை மாற்றி ஒரு ஆண் டாக்டரை மட்டும் நியமித்திருக்கிறார்கள். ஆஸ்பத்திரிக்கு வரும் நோயாளிகளில் பாதிக்குமேல் பெண்களாக இருப்பதாலும், பிரசவ விடுதி இருப்பதால் பிரசவத்திற்காக தாய்மார்கள் அதிகம் வருவதினாலும் இங்கு ஒரு லேடி டாக்டரை நியமிக்குமாறு சம்பந்தப்பட்ட இலாகாவை கேட்டுக்கொள்கிறேன்.

எஸ். எஸ். சுப்பிரமணியன்,
உறுப்பினர், ஊராட்சி மன்றம்,
சோழவந்தான்.

### கார்டு வினியோகத்தில் குழப்பம்

ஐயா,

பீர்மேட்டிலுள்ள ஏலப்பாறை பஞ்சாயத்தில் சீனிக்கானரேஷன் கார்டுகள் கொடுக்கும் விஷயத்தில் பெருங்குழப்பம் ஏற்பட்டிருக்கிறது கார்டுகள் சீனி வாங்க வேண்டிய உரியவருக்குக்கொடுக்கப்படாமல் மொத்தமாகக் கடைக்காரர்களிடம் தரப்படுகின்றன. சீனி வாங்கச் சென்றால் உங்கள் பெயரில் கார்டு இல்லை என்று கூறப்படுகிறது. இந்தக் குழப்பத்தை நீக்க கார்டு வினியோகிக்கப்படுமா?

பி. எஸ். சுப்பையா,
மேலப்பெருந்துறை (பீர்மேடு)

### அரசாங்கம் ஆவனசெய்யுமா?

ஐயா,

கன்னியா குமரி மாவட்டம் ஆசாரிப்பள்ளம் காசநோய் மருத்துவ நிலையத்தில் பலர் சிகிச்சைக்கு வருகிறார்கள். இங்கு சீட்டுக் கொடுக்குமிடம், போட்டோ எடுக்குமிடம், ஊசிபோடுமிடம் எங்கு என்று புதிதாக வருபவர்களுக்குத் தெரிந்துகொள்ள சிரமம் ஏற்படுகிறது. இப்போதுள்ள அதிகாரி இவற்றை ஓரளவு பூர்த்தி செய்துவருகிறார். ஏழை நோயாளிகளுக்கு கூட்டு தர்மநிதியிலிருந்து உதவியளிக்கவேண்டும். தொழில் நிலயம் ஏற்படுத்தவும் ஆவனசெய்தல் வேண்டும். சர்க்கார் ஆவன செய்யுமா?

சங்கய்யா,
ஆசாரிபள்ளம்,

# மதுரை மாவட்ட உணவு இயக்க ஊர்வலம், பொதுக்கூட்டங்கள்

### போடி

உணவுவிலை உயர்வு கண்டன தினப் பொதுக்கூட்டம் எ. எஸ். இளவழகன் (தி.மு.க.) தலைமையில் நடைபெற்றது. ஆர். கே. ராஜன், பவுன்ராஜ் (த.நா.சோ.) ஞான சுப்பிரமணியம் பாண்டியன், சுப்பிரமணியம் (தி.மு.க.) எஸ். பி. நடராசன், நகராட்சி மன்ற உறுப்பினர், ஆர். கே. சென்னையசாமி ஆகியோர் பேசினர்.

22-11-59ல் போடி நகரம் கண்டிராத மாபெரும் மக்கள் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

### அணைக்கரைப்பட்டி

ஊராட்சி மன்ற உறுப்பினர் பெ. கிருஷ்ணன் தலைமையில் உணவு இயக்கக் கூட்டம் நடைபெற்றது. கே. சாமிராசு (கம்) கே. அழகர்சாமி (தி.மு.க.) ஆகியோர் பேசினர்கள். பி. சக்கரத்தேவர் (கம்), எம். பி. சம்பத் (தி.மு.க.) ஆகியோர் கன்வீனர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பெரியகுளம்

மீனாட்சியம்மன் படித்துறையில் தோழர் எஸ். எம். பொன்னையா (கம்யூ.) தலைமையில் உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் எஸ்.ஏ. ரஹீம் மோட்டார்தொழிலாளர் சங்கம், பி. அப்துல் ரஹிமான் கம்யூனிஸ்ட், பி. பாண்டியன் தி.மு.க., ஏ.எஸ். அனிபா தி.மு.க. ஆகியோர் பேசினர். கூட்டத்திற்கு முன்னர் மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது. ஜி. கல்லுப்பட்டி, சாத்தாகோவில் பட்டி, புல்லக்காபட்டி, தேவதானப்பட்டி ஆகிய கிராமங்களிலிருந்தும் மக்கள் ஊர்வலமாக வந்து கூட்டத்தில் கலந்துகொண்டார்கள்.

### ஜெயமங்கலம்

ஜீவா திடலில் டி. பி. அய்யாவு தலைமையில் உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. இ. ராசு, ராஜேந்திரன், எஸ். பழனியப்பா ஆகியோர் பேசினர்கள். கே. குப்பு, கே. செல்லையா முற்போக்குப் பாடல்கள் பாடினர்கள், உணவுக் கமிட்டி ஒன்றும் அமைக்கப்பட்டது.

### கொடைக்கானல்

திரு. மை. க. முகம்மது இஸ்மாயில் தலைமையில் உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கே. எம். மேத்தா (தி. மு. க.) ஆர். டி. கோவிந்தன் (நாம் தமிழர்) கா. நாடார் ராயன், ஏ. ஜேம்ஸ் (கம்) ஆகியோர் பேசினர். ஆரம்பத்தில் மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது.

### ஏழுவனம்பட்டி

சர்வகட்சி விலைவாசி குறைப்பு ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றன. பதுக்கல் கொள்ளைக்காரர்களைக் கைது செய்யவேண்டுமென்று கோரியும், மற்றும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### உசிலம்பட்டி

ஊராட்சி மன்ற உறுப்பினர் ஆர். தேவராசன் தலைமையில் சர்வகட்சி உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் டி. பாலராசு (கம்) ஜி. பக்தவத்சலம் (கம்) பி. எஸ். மாணிக்கம் (தி. மு. க.) வி. எஸ். எஸ். துரைராசு (த.அ.க.) ஆ. குருசாமி (த. அ. க.) ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

### அய்யனர்பட்டி

ஐயனார் கோட்டையில் சி. கோவிந்தராசு தலைமையில் நடைபெற்ற உணவு இயக்கப் பொதுக்கூட்டத்தில் என்.எஸ். சந்தானம் (கம்யூ.) அழகன் (தி. மு. க.) மணிமொழியன் (தி. மு. க.) ஸ்ரீராமுலு (சோஷ.) பெருமாள் (சோஷ.) மற்றும் பலர் பேசினார்கள்.

### சமயநல்லூர்

பொதுமக்களின் நடைபெற்ற சர்வகட்சி கூட்டத்திற்கு தோழர் கா. அழகு தலைமை வகித்தார். தோழர்கள் பரமசிவம், பி. கருப்பையா, கே. மலைராசன் ஆகியோர் பேசினர்.

### சோழவந்தான்

வ. உ. சி. திடலில் தோழர் கே. மாணிக்கம் தலைமையில் விலைவாசி உயர்வு கண்டனப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் வி. குருநாதன் (சோஷ.) வி. செங்குட்டுவன் (தி. மு. க.) என். அழகம் (பு.தொ. க.) ஆர். கே. ராஜன் (சோஷ.) ஆகியோர் பேசினர்.

தோழர் எஸ். எல். சுப்பிரமணியம் வாசித்த தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

கடைசியாக தமிழக விவசாய சங்கத் தலைவர் தோழர் ஆர். ராமராஜ பேசினர். அவர் பேசுகையில் உணவு மகஜரில் கூறியுள்ள கருத்துக்களை அரசு செவிசாய்க்காவிட்டால் சர்வ கட்சி தலைவர்களும் போராட்டத்தில் குதிக்க தயாராக இருக்கிறார்கள் என்றும், பெரு நிலச்சுவான்தார்களிடம் கட்டாய மொத்தக் கொள்முதல் செய்ய வேண்டுமென்றும் கூறினர்.

### வேடசந்தூர்

மாரியம்மன் கோவில் முன்பு வி. நாகசுந்தரம் (தி.மு.க.) தலைமையில் நடைபெற்றது. வழக்கறிஞர் இரா. இராமலிங்கம், வி. கந்தசாமி, கே.எம்.ஆர். மாரியப்பன், கே.எம்.ஏ. தங்கராசன், கே. நாகப்பன், வி. குருசாமி ஆகியோர் பேசினர். ஏ. முகமது அலி நன்றி கூறினர்.

### ஒட்டன்சத்திரம்

ஷண்முகா தியேட்டரின் முன்பிருந்து சர்வகட்சிகளின் கொடிகளுடன் ஒரு பெரிய ஊர்வலம் புறப்பட்டு தும்மிச்சம்பட்டி சென்று திரும்பி ஒட்டன்சத்திரம் வ. உ. சி. திடலை வந்தடைந்தது. அங்கு தி. மு. க. தோழர் நா. செங்கசாமி தலைமையில் கூட்டம் நடந்தது. விலைவாசி உயர்வை கண்டித்துப் பேசியபின் கம்யூனிஸ்ட் தோழர் ஏ. எஸ். மணி சர்வகட்சி தீர்மானங்களை வரிசையாகப் படித்தார். தோழர் மா. பழனியப்பன்-அ. க. அவர்களால் ஆமோதிக்கப்பட்டு அனைவரின் கைதட்டல்களுடன் ஏகமனதாக அத்தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# குந்தா திட்ட தொழிலாளர் கோரிக்கை தினம்

எமரால்ட் முகாம், நவ. 20—

இங்குள்ள குந்தா திட்டத் தொழிலாளர்கள் நவ. 8-ல் கோரிக்கை தினம் கொண்டாடினர். அன்று கெத்தை, குந்தா, எமெரால்ட், சாண்டினுலா ஆகிய பகுதிகளில் ஊர்வலங்களும் பொதுக்கூட்டங்களும் நடைபெற்றன.

சம்மேளனத் துணைத் தலைவர் திரு. ஜெகஜுதன் தலைமையில் நடைபெற்ற எமரால்ட் பொதுக்கூட்டத்தில் சம்மேளனப் பொதுக்காரியதரிசி தோழர் எஸ். சி. கிருஷ்ணன் குந்தா தொழிலாளரின் கோரிக்கைகள் குறித்து விரிவாகப் பேசினர்.

பிறகு தோழர் ஜே. பெள்ளா கவுடர் பேசுகையில் தொழிலாளர் கோரிக்கைகள் சம்பந்தமாக இன்னும் ஒரு மாத காலத்துக்குள் முடிவு ஏற்படாது போனால் தொழிலாளர்கள் மீண்டும் போராட்டத்தில் இறங்க நேருமென எச்சரித்தார்.

எமரால்ட் யூனியன் காரியதரிசி, ராமசாமி, இஸ்ரேல் ஆகியோர் பேசியபின் தொழிலாளர் கோரிக்கை சம்பந்தமான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# ஏனோ இன்னும் விலை குறைய காணோம்!

**ஆர். கலிராஜன் (விழுப்புரம் தாலுகா வி. ச. தலைவர்)**

"அன்னம்போலே பெண்ணிருக்கு"—என்ற மெட்டு

விளைவும் நல்லா விளைஞ்சிருக்கு விதவிதமாய் பொருளிருக்கு
விலை குறைய ஏனோ இன்னும் காணோம்—உணவு
விலை குறைய ஏனோ இன்னும் காணோம்.

அணைநிறைய நீர்இருக்கு அதிக நெல்லும் விளைஞ்சிருக்கு
அரிசி விலை ஏறினதும் ஏனோ?—காங்கிரஸ்
ஆட்சியாளர் திறமை இதுதானோ!

பருப்பு மல்லி புளி மிளகாய் பலசரக்கு சீனிவெல்லம்
கருப்பு மார்க்கட் காரர்களினாலே—எல்லாம்
கைதியாகி விழிக்குதிந்த நாளே.

பெருநிலப் பிரபுக்களை பிடித்துக் கொள்முதல் செய்தால்
வறுமை பசி தீருமென்று சொன்னால்—சர்க்கார்
திருதிரென விழிப்பது தானென்ன.

பட்டினிக் கொடுந்துயரால் பதறிமக்கள் சோறு கேட்டால்
சுட்டு ரத்தம் குடிக்குதிந்த ஆட்சி—பண
கும்பல்வாழ செய்யுதந்தோ சூட்சி.

"வாங்கி மக்கள் சேமிப்பதால் வந்ததிந்த தொல்லை" என்று
ஏங்கும் நம்மைப் பார்த்து காமராஜர்—பேசி
ஏய்க்க பார்க்கின்றாரே காந்திதாசர்.

கள்ளமார்க்கட் காரர்களை கொள்ளைலாபக் கும்பல்களை
கழுவிலேற்ற போறேனென்ற நேரு—அவர்க்கு
கருணைக்காட்டி வளர்ப்பதேனோ பாரு!

பாலும் தேனும் பாயுமென்று பறையடித்தார் மேடையேறி
நாலு மூன்று ஆண்டு ஆட்சியாலே—நம்
நலிவும் மெலிவும் உயர்ந்ததுவே மேலே

ஆற்றல்மிகு தோழர்களே வேற்றுமையை மறந்துவிட்டு
மாற்றங்காண ஓரணியில் வாரீர்—இதில்
மக்கள் சக்தி வெற்றிபெறும் பாரீர். (விளைவும்)

# விலைவாசி உயர்வுக்குக் காரணம்

## பெருநிலப்பிரபுக்களும், பதுக்கல்காரர்களுமே

### மன்னார்குடியில் முருகானந்தம் முழக்கம்

மன்னார்குடி, நவ. 22—

மன்னார்குடி சர்வகட்சி உணவுப் பொருள் விலைவாசி உயர்வு எதிர்ப்புக் கமிட்டியின் சார்பாக நடத்தப்பட்ட ஊர்வலத்தில் சுமார் 10,000 பேர் கலந்து கொண்டனர்.

ஊர்வலத்தில் கம்யூனிஸ்ட் கட்சி, தி. மு. கழகம், தமிழ்நாடு சோஷலிஸ்ட் கட்சி, விவசாயிகள் சங்கம், விவசாயத் தொழிலாளர் சங்கம் ஆகிய ஸ்தாபனங்கள் கலந்து கொண்டன.

தேரடி மைதானத்தில் எம். இராமநாதன் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் சுமார் 15,000 பேர் கலந்து கொண்டனர்.

சர்வகட்சிக் கூட்டுக் கமிட்டிக் காரியதரிசி டி. ஆறுமுகம் (கம்) இராஜ்யத்தின் உணவு நிலைமையையும் சர்க்காரின் போக்கையும் பற்றி விரிவாகப் பேசினர். தஞ்சை மாவட்ட சர்வகட்சி கமிட்டிச் செயற்குழு உறுப்பினர் நாராயணசாமி (தி.மு.க.) விஷம் போல் ஏறிக் கொண்டிருக்கும் விலைவாசி உயர்வைத் தடுக்க மக்கள் முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

அடுத்துப் பேசிய எஸ். ஏ. முருகானந்தம், இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேறியும், நாட்டில் உணவு தானியம் பெருகியும் உணவு தானிய பஞ்சம் ஏன் என்று கேட்டார். பதுக்கல்காரர்களும், பெரு நிலச்சுவான்தார்களும் இந்த மாபெரும் சதியைச் செய்கின்றனர்.

இவ்வளவுக்குப் பிறகும் காங்கிரஸ் ஆட்சிபீடம் இவர்களைத் தண்டிக்காமல் பாதுகாத்து வருகிறது என்றார். மேலும் அவர் பேசுகையில் சர்க்காரின் கொள்கையிலும், நடைமுறைகளிலும் ஏற்பட்டிருக்கும் ஊழல்களை விளக்கிப் பேசினார் எனவே, இந்த அவல நிலையைப் போக்க சர்வ பகுதி மக்களும் ஒன்றுபட்டுப் போராட முன்வர வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

அடுத்து சுந்தரராஜன் பி. ஏ. பி. எல்., (தி.மு.க.), எஸ். ஜெயராமன் (சோஷலிஸ்ட்), ஏ. நடராஜன் (வி தொ. ச.) ஆகியவர்கள் பேசினார்கள்.

கூட்டத்தில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# திண்டிவனத்தில் உணவு இயக்கம் 4000 பேர் திரண்ட பொதுக்கூட்டம்

திண்டிவனம், நவ. 23—

உணவுப் பொருட்களின் விலைவாசி உயர்வைக் கண்டித்து, திண்டிவனமே கண்டிராத அளவில் மாபெரும் அணிவகுப்பு நடைபெற்றது. சுமார் 1000-த்திற்கதிகம் பேர் திரண்ட ஊர்வலத்தில் கம்யூனிஸ்ட் கட்சி, தி. மு. கழகம், விவசாய சங்கம், இன்னும் பல ஸ்தாபனங்களும் ஊர்வலத்தில் கலந்துகொண்டன.

ஊர்வலத்திற்கு சி. ராமகிருஷ்ணன் எம்.சி. கம்யூனிஸ்ட், பூபால் எம்.சி. தி.மு.க. ஆகியவர்கள் தலைமை தாங்கினார்கள்.

பதுக்கல் கொள்ளைக்காரனையும் ஒரு கவளம் அன்னமில்லாமல் தவிக்கும் ஏழையையும் சித்தரிக்கும் கலா நிகழ்ச்சிகளும் ஊர்வலத்தில் இடம்பெற்றன. காந்தி சதுக்கத்தில் இரவு 7 மணிக்கு பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு திண்டிவனம் நகர சபைத்தலைவர் பி. ஜெயராமன் தலைமை வகித்தார். கூட்டத்தில் சுமார் 4000த்திற்கு மேற்பட்ட மக்கள் கலந்துகொண்டனர். கே. வீரராகவன் கம்யூனிஸ்ட், ராமாநுஜம் தி.மு.க. ஏ. முருகேசன், டி. எம். பழனிச்சாமி எம்.சி., எஸ். நடராஜன் தி.மு.க. ஆ. தங்கவேலு, எம். ஜகந்நாதன் எம்.சி. ஏ. கோதண்டம், மொழியான் முருகேசன், எஸ். பக்கிரி, ஏ. லோகநாதன், எம். கிருபாபுரி ஆகியவர்கள் பேசினார்கள்.

### நெய்வேலி

நெய்வேலியில், உணவு விலைவாசிக் குறைப்பு சர்வகட்சியின் சார்பில் ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெற்றது. கூட்டத்திற்கு எஸ். ஏ. பாபுலேசன் (கம்யூனிஸ்ட்) தலைமை வகித்தார். பி. புருஷோத்தமன் (கம்யூனிஸ்ட்) பேசுகையில் சர்வகட்சிகளும் இந்தப் போராட்டத்தில் கலந்து கொண்டதை வரவேற்றுக் குறிப்பிட்டார்.

ஜெ. பி. நயினார் (தி. மு. க.) பேசுகையில் சர்க்கார், உணவு தானியப் பொருட்களை நியாயமான விலையில் மக்களுக்கு கிடைக்கவில்லை என்றார்.

ரத்னசாமி பேசுகையில், உணவு விலைவாசி உயர்வினால் நெய்வேலி மக்கள் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளார்கள் என்று கூறி, சர்க்காரின் போக்கையும் வன்மையாகக் கண்டித்தார்.

# மாயூரத்தில் விலைவாசி உயர்வை எதிர்த்து மாபெரும் அணிவகுப்பு

மாயூரம், நவ. 22—

மாயூரத்தில் நடைபெற்ற உணவு விலைவாசி உயர்வு எதிர்ப்புக் கூட்டத்தில் கலந்துகொள்ள கிராமப்புறங்களிலிருந்தெல்லாம் மக்கள் ஊர்வலமாக அணிதிரண்டு வந்திருந்தனர்.

மாலை 4 மணிக்கு ரெயிலடி சந்தைத் தோப்பில் இருந்து எஸ். ராஜாபாதர் எம். சி. (கம்யூ.), என். கிட்டப்பா (தி.மு.க.) தி.சு. அனந்தராமன் (தமிழரசு), வி கிருஷ்ணசாமி (வி.ச,) ஆகியோர் தலைமையில் புறப்பட்ட ஊர்வலம் நகரை வலம் வந்து நகர பூங்காவை அடைந்தது. அங்கு நடைபெற்ற கூட்டத்திற்கு எஸ். ராஜாபாதர் எம். சி., (கம்யூனிஸ்ட்) தலைமை வகித்தார் கூட்டத்தில் 5000 மக்கள் கலந்து கொண்டனர்,

கோ. வி. பாரதி மோகன் (கம்யூ.) அனந்தராமன் (தமிழரசு கிட்டப்பா எம்.சி. (தி. மு. க.) வி. க. முத்துச்சாமி (வ. ச.) எஸ். சிங்காரம், ஜி. துரைக்கண்ணு ஆகியோர்கள் இன்றைய விலைவாசி உயர்வுக்குக் காரணம் என்ன என்றும், விளக்கிப் பேசியதோடு, இந்த நிலைமைக்கு சர்க்காரின் போக்கு தான் காரணம் என்றும் சுட்டிக் காட்டிப் பேசினார்கள்.

# திருச்சி அச்சுத் தொழிலாளர் சங்கம்

திருச்சி, நவ. 22—

திருச்சி அச்சுத் தொழிலாளர் சங்கம் அறிவிப்பதாவது: 'சிட்டி பிரஸில் தகுந்த காரணமின்றி நீக்கப்பட்ட வி. ராமச்சந்திரன் இடைக்கால சம்பளத்துடன் திரும்பவும் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டுமென மதுரை லேபர் கோர்ட் தீர்ப்பளித்துள்ளது. இத் தொழிலாளியின் சார்பில் சங்கம் நடவடிக்கை எடுத்தது.

"வெட்னஸ்டே" பிரஸில் ஏ. சுந்தரம் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். சங்கம் நடவடிக்கை எடுத்ததின் பேரில் நஷ்டஈடு ரூ. 550 தருவதாக கோர்ட்டார் முன் சமரச ஒப்பந்தத்துக்கு நிர்வாகம் வந்தது.

திருச்சியிலுள்ள சகல அச்சுக்கூடங்களுக்கும் 2 மாத போனஸ் கோரிக்கை அனுப்பப்பட்டது. தீபாவளியை யொட்டி சுமார் 400 தொழிலாளர்கள் ஒரு மாதச் சம்பளம் (பஞ்சப்படியுடன் சேர்த்து) போனஸாகப் பெற்றனர். மொத்த போனஸ் தொகை சுமார் ரூ. 25000 ஆகும்.

# கோவை நகரசபைத் தலைவர் தலைமையில் உணவு விலைக் குறைப்பு சர்வகட்சி கூட்டம்

## 25,000 பேர்களைக் கொண்ட மாபெரும் அணிவகுப்பு

கோவை, நவ, 23—

கோவையில், சர்க்காரின் உணவுக் கொள்கையை எதிர்த்து. சர்வ கட்சி விலைக் குறைப்புக்குழுவின் சார்பில் 22ந் தேதியன்று, மாலை 3 மணிக்கு தெப்பக்குளம் மைதானத்திலிருந்து, கம்யூனிஸ்டு கட்சி, தி.மு.க., த.அ.க., நாம் தமிழர் இயக்கம் ஆகிய கட்சிகளின் சார்பில், கோவை நகர வார்டுகளிலிருந்தும், சுற்று வட்டார கிராமங்களிலிருந்தும் சர்வ கட்சி கொடிகளுடன், கோவை நகர மன்றத் தலைவர் எம். பூபதி (கம்.), எஸ். ஏ. ராசமாணிக்கம் (தி.மு.க.), சு. காமராசு (த.அ.க.), கோ. நா, தமிழரசு (நா.த.இ.) ஆகிய கட்சி தலைவர்கள் தலைமையில்; சுமார் 5000த்திற்கு மேற்பட்ட மக்களின் ஊர்வலம் புறப்பட்டது. இவ்வூர்வலத்தில் சர்வகட்சி குழுவின் பிரகாரம், கோஷங்களோடு, கோவையில் முக்கிய வீதிகளின் வழியாகச் சென்று மாலை 7 மணிக்கு பொதுக்கூட்டம் நடத்துகின்ற சிதம்பரம் பூங்கா மைதானத்தை வந்து அடைந்தது.

கோவை நகர வீதிகளில் ஆயிரக்கணக்கான தாய்மார்களும். பொதுமக்களும், சர்வ கட்சி ஊர்வலத்தின் கோஷங்களை உன்னிப்பாகக் கவனித்தார்கள்.

பொதுமக்களும், தாய்மார்களும் இன்றுள்ள விலைவாசி உயர்வைத் தடுக்க எல்லா கட்சிகளும் ஒன்றுபட்டு முயற்சி எடுத்தால், சர்க்கார் நடவடிக்கையில் ஈடுபட நிர்ப்பந்திக்க வைக்கமுடியும் என்று அபிப்பிராயப்பட்டார்கள்.

மேற்படி பொதுக்கூட்டத்தில் கோவை நகர மன்றத் தலைவர் தோழர் எம். பூபதி தலைமை வகித்தார். கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் அவர்களும், தி.மு.க. சார்பில் ஈ. வி. கே. சம்பத் எம். பி. அவர்களும், தமிழரசு கழகம் சார்பில் புலவர் மாயூரம் கீரன் அவர்களும், நாம் தமிழர் இயக்கம் சார்பில் கோ. நா. தமிழரசு அவர்களும் விலைவாசி உயர்வை உடனடியாகக் குறைக்கவேண்டிய அவசியத்தைப்பற்றி புள்ளி விபரங்களோடு சொற்பொழிவாற்றினார்கள், கடைசியாக மாநில சர்க்கார், விலைவாசியை குறைக்க எந்தவிதமான நடவடிக்கைகளும் எடுக்கத் தயங்கினால் சென்னையில் சர்வ கட்சிக் குழு தக்க நடவடிக்கைகளைக் கைக்கொள்ளும் என்று எச்சரிக்கை செய்தார்கள். சர்வகட்சிக் குழுவின் தீர்மானத்தை நகர சபைத் தலைவர் படித்தார். கூட்டத்தில் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. கூட்டத்தில் சுமார் 25,000 மக்கள் கலந்து கொண்டனர்

# நகரசபை மாஜி கணக்காளர்மீது மேலும் மூன்று வழக்குகள்

## செஷன்ஸ் நீதிபதி முன் குற்றப்பத்திரிகை தாக்கல்

### லஞ்சம் வாங்கியதாக குற்றச்சாட்டு

சென்னை, நவ. 25—

சென்னை நகரசபை மாஜி கணக்காளர் சத்தியமூர்த்திமீது தனித் தனியே மூன்று வழக்குகள் செஷன்ஸ் நீதிபதி முன் தாக்கல் செய்யப்பட்டுள்ளன.

இவர்மீது ஏற்கனவே மாகாண மாஜிஸ்திரேட் கோர்ட்டில் தமக்குச் சொந்தமில்லாத பொதுப் பணத்தை கையாடியதாக வழக்கு நடந்து வருவது தெரிந்ததே.

**லஞ்சம்!**

செஷன்ஸ் நீதிபதி முன் தாக்கல் செய்யப்பட்ட வழக்கில் சத்தியமூர்த்தி மீது குறிப்பாக லஞ்சம் வாங்கியதாகக் குற்றம் கூறப்பட்டிருக்கிறது.

மொத்தமாக சுமார் 16 ஆயிரம் ரூபாய் மூன்று தவணைகளில் கணக்கிடப்படாமல் கையாடல் செய்யப்பட்டிருப்பதாக சத்தியமூர்த்திமீது வழக்கு தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

இதைத் தவிர, 1952 மேவரை ஒரு வருட காலத்தில் லஞ்சம் வாங்கி ரூ. 50,000 வரை சத்தியமூர்த்தி பணம் சேர்த்திருந்தாராம். இதுபற்றிய விவரங்களை ரகசியப் போலீசார் சேகரித்திருப்பதாக குற்றச்சாட்டில் கூறப்பட்டிருக்கிறது.

வழக்கை ஏற்றுக்கொண்டு விசாரணையை டிசம்பர் முதல் வாரத்திற்கு நீதிபதி ஒத்திவைத்தார்.

# மதுரை மோட்டார் லேபரர்ஸ் யூனியன் பெரியகுளம் கிளை

## உணவுப் போராட்டத்திற்கு ஆதரவு

மதுரை, நவ. 22—

மதுரை மோட்டார் தொழிலாளர் யூனியனின் பொதுக்குழு கூட்டம் 17-11-59-ல் திரு. எம். காசியாபிள்ளை தலைமையில் நடைபெற்றது. கீழ்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

உணவு விலைகள் விஷம் போல், ஏறிக் கொண்டே போவதைத் தடுத்து நிறுத்த நடைபெறும் சர்வகட்சி உணவுவிலை குறைப்பு இயக்கத்துடன் ஒத்துழைப்பதெனவும், வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள நிர்வாகக் கமிட்டிக்கு பூரண அதிகாரம் கொடுப்பதெனவும், மதுரை சுந்தரம் டிரான்ஸ்போர்டில் டிரைவர் திரு. நாராயணசாமி செட்டியார், மதுரை தலைமை யூனியன் என்ற காரணத்திற்காக எவ்வித முகாந்திரமுமின்றி வேலையினின்றும் நீக்கம் செய்யப்பட்டிருப்பதைக் கண்டித்தும், அவரை உடனடி வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டும், பெரியகுளம் ரஹீம் டிரான்ஸ் போர்ட் நிர்வாகம், கண்டக்டர் பி. எஸ். வி. ஷேக்தாவுதை வேலையிலிருந்து நீக்கியதைக் கண்டிப்பதோடு உடனடியாக அவருக்கு வேலை கொடுக்கும்படி நிர்வாகத்தை வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. (ந. நி.)

# பொன்மலை பஞ்சாயத்துக் கூட்டம்

## ஏழிசை மன்னருக்கு அனுதாபம் தெரிவித்தனர்

பொன்மலை, நவ. 22—

பொன்மலை பஞ்சாயத்தின் சாதாரணக் கூட்டம் 19-11-59ல் நடைபெற்றது. ஏழிசை மன்னர் எம். கே. தியாகராஜபாகவதர் மரணத்திற்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மேலும் பஞ்சாயத்துப் பகுதி பூராவும் [illegible] ராடு வேலை செய்ய நி[illegible]ப்புத் தொகை அனுமதிக்[illegible]பட்டது. (ந. நி.)

# சேலத்தில் சர்வகட்சி பொதுக்கூட்டம்

## 15,000 பேர் அணிவகுப்பு

சேலம், நவ. 23—

22-11-59 மாலை 5 மணிக்கு கம்யூனிஸ்ட் கட்சி, ஜில்லா தொழிற்சங்கக் கவுன்சில், திராவிட முன்னேற்றக் கழகம், தமிழரசுக் கழகம் ஆகிய ஸ்தாபனங்கள் சார்பில் ராஜேந்திரா சத்திரத்தில் இருந்து சுமார் 3000 பேர் கொண்ட ஊர்வலம் புறப்பட்டது. ஊர்வலத்திற்கு சர்வகட்சிக்கமிட்டி கன்வீனர்கள் இ. ஆர். கிருஷ்ணன் (தி. மு. க.) கொ. ப. பச்சையப்பன் (த. க) கே. செல்லப்பன் (கம்யூ. கட்சி) ஆகியோர் தலைமை தாங்கினர். மூன்று கட்சிகளின் கொடிகளும் ஊர்வலத்தின் முகப்பில் கொண்டு செல்லப்பட்டது. ஊர்வலத்திற்கு முன்னால் நையாண்டி மேளம் வாசித்து சென்றனர்.

ஊர்வலத்தில் மில் தொழிலாளர் சங்கம், மேக்னசைட் தொழிலாளர் சங்கம், முனிசிபல் தொழிலாளர் சங்கம், பீடித் தொழிலாளர் சங்கம், ஹோட்டல் தொழிலாளர் சங்கம், சாயப்பட்டரைத் தொழிலாளர் சங்கம், ஆயில் அண்டு ரைஸ் மில் தொழிலாளர் சங்கம், தோல் பதனிடும் தொழிலாளர் சங்கம்ஆகிய சங்கங்களில் திரண்டுள்ள தொழிலாளர்கள் பதாகைகளுடன் அணிவகுத்து சென்ற காட்சி கண்கொள்ளா காட்சியாக இருந்தது.

ஊர்வலத்தின் இறுதியில் சேலம் போஸ் மைதானத்தில் நடைபெற்ற 15000 பேர் கொண்ட பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு அறப்போர் கமிட்டியின் கன்வீனர்களில் ஒருவரான கே. செல்லப்பன் தலைமை வகித்தார். விலைவாசி குறைப்பு சம்பந்தப்பட்ட தீர்மானத்தை மற்றொரு கன்வீனரான இ. ஆர். கிருஷ்ணன் பிரேரேபணை செய்தார். கன்வீனர் கொ. ப. பச்சையப்பன் தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. கூட்டத்தில் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களில் ஒருவரான திருமதி சத்தியவாணிமுத்து எம். எல். ஏ. கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரான கே. ரமணி, தமிழரசுக் கழகத் தலைவர்களில் ஒருவரான குடந்தை எஸ். டி. பாலு நாம் தமிழர் இயக்கத்தை சேர்ந்த நங்கைகாதர் ஆகியோர் பேசினர்.

கூட்டத்தில் உண்டியல் வசூல் மூலமாக ரூ. 10-12-6 வசூலாயிற்று,

கூட்ட இறுதியில் விலைவாசிக் குறைப்பு வார இயக்கத்தில் ஒன்றுபட்டு செயல்பட்டு ஒத்துழைத்த சகல தோழர்களுக்கும் நன்றி தெரிவித்தும், ராஜ்யவிலைக் குறைப்புக் கமிட்டியின் முடிவு களை சர்க்கார் ஒப்புக்கொள்ளாவிட்டால், ராஜ்ய ரீதியாக போராட்டம் நடத்த வேண்டுமென கமிட்டி அறைகூவல் விடுத்தால் சகலரும் பூரண ஒத்துழைப்பு தர வேண்டும் என்ற வேண்டுகோளுடன் கூட்டத்தை முடித்தார்.

### அம்மாப்பேட்டை

சேலம் நகரில் விலைக் குறைப்பு சர்வகட்சி பொதுக்கூட்டங்கள் தொடர்ந்து நடைபெற்றன. 18-11-59ல் சேலம் நகர் அம்மாப்பேட்டையில் தமிழரசுக் கழகத் தோழர் கொ. ப. பச்சையப்பன் தலைமை வகித்தார். கூட்டத்தில் தமிழரசுக் கழகத் தோழர்கள் ஆ. சின்னையன், குப்புசாமி, தி.மு.க தோழர்கள் ஆறுமுகம், க. வச்சிரவேலு எம்.ஆர். ராஜகோபாலன், கம்யூனிஸ்ட் தோழர் கே. செல்லப்பன், தொழிற்சங்கத் தோழர் ம. கல்யாணசுந்தரம் ஆகியோர் பேசினர்.

### குகை

19-11-59ல் குகை மாரியம்மன் கோவில் மைதானத்தில் தி.மு.க. தோழர் எம். ஆர். ராஜகோபாலன் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் தி மு. க. தோழர்கள் சின்னையன், க. வச்சிரவேலு, தொழிற்சங்க கவுன்சில் தோழர் ம. கல்யாணம், கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்கள் ஜி சாமுவேல்; கே. செல்லப்பன் ஆகியோர் பேசினர்.

### செவ்வாய்ப்பேட்டை

20—11—59ல் செவ்வாய்ப்பேட்டை மீனாட்சி அம்மன் கோவில் முன்னால் தி. மு. க. தோழர் க. வச்சிரவேலு தலைமையில் நடைபெற்றபொதுக்கூட்டத்தில் தி. மு. க. தோழர் இ. ஆர். கிருஷ்ணன், தமிழரசுக் கழகத் தோழர் எஸ். டி. பாலு தொழிற்சங்கத் தோழர் ம. கல்யாணம்; கம்யூனிஸ்ட் கட்சித் தோழர் கே. செல்லப்பன் ஆகியோர் பேசினர்.

### குமாரசாமிப்பட்டி

21—11—59-ல் குமாரசாமிப்பட்டி கண்ணகி மார்க்கெட் எதிரில் தொழிற்சங்கத் தோழர் ம. கல்யாணசுந்தரம் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர் ஜி. சாமுவேல்: தி. மு. க. தோழர் கி. வச்சிரவேலு, தமிழரசுக் கழகத் தோழர் எஸ்.டி. பாலு ஆகியோர் பேசினர். (ந-நி)

# வலதுசாரி பிற்போக்காளருக்கு எதிராக ஜனநாயக சக்திகளின் போராட்டம்

## கேரள இடைத் தேர்தல் குறித்து தோழர் கோவிந்தன் நாயர் பேச்சு

திருச்சூர், நவ. 25—

"கேரள இடைத் தேர்தல், நாட்டில் வலதுசாரி பிற்போக்கு சக்திகளுக்கும் ஜனநாயக, முற்போக்கு சக்திகளுக்கும் நடைபெறும் போராட்டமாகும்; கேரளத்தில் கம்யூனிஸ்டுகளுக்கும் கட்சி சார்பில்லாத ஜனநாயகவாதிகளுக்கும் இடையே ஏற்பட்டுள்ள இணக்கம் நாடு முழுமையிலும் வலதுசாரி பிற்போக்காளர்கள் கைமேலோங்குவதைத் தடுத்து நிறுத்தும் வல்லமை கொண்டிருக்கும்" எனக் கேரள ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் எம். என். கோவிந்தன் நாயர் எம். பி. கூறினார்.

இங்கு நடைபெறும் ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சி மாநாட்டில் அரசியல் ஸ்தாபன அறிக்கையைச் சமர்ப்பித்து அவர் பேசுகையிலேயே மேற்கண்டவாறு கூறினார். அவர் மேலும் கூறியதாவது:

"காங்கிரஸ்காரர்களில் சிலரும், தனிப்பட்டவர்களும் தேசிய முஸ்லீம்களும், சில முஸ்லீம் லீகினரும் காங்கிரஸின் சந்தர்ப்பவாதக் கூட்டினைக் கண்டிக்க முன்வந்திருப்பது பாராட்டத்தக்கது.

"தனது சாதனைகளின் அடிப்படையில் எழுந்த பெருமித உணர்வுடன் ராஜ்யக் கமிட்டி மாநாட்டின் முன் நிற்கிறது. தவறுகள் சிலவும் நேர்ந்திருக்கலாம். ஆனால் தவறுகள், கட்சியின் சாதனைகள், ராஜ்ய கம்யூனிஸ்ட் அரசாங்கத்தின் சாதனைகள் ஆகியவற்றை மொத்தமாகப் பரிசீலித்தால் மீதியாவது கட்சிக்குச் சாதகமானதாகவே இருக்கும். விவசாய சீர்திருத்தங்களைப் பொறுத்தவரை ஏழை விவசாயிகளுக்கும் நிலமில்லாதவர்களுக்கும் நிவாரணம் அளித்ததோடு மட்டுமின்றி சீர்திருத்தங்களால் ஓரளவு பாதிக்கப்படும் சிறு நிலச்சுவான்தார்களுக்கும் வசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன.

"ஆனாலும் சிறு நிலச்சுவான்தாரின் விடிவுகாலம் பெருநிலப் பிரபுக்களுடன் சேர்வதால் கிட்டாது என்பதை இன்னும் தெளிவாகஉணர்த்த வேண்டியுள்ளது. நிலச் சீர்திருத்தங்கள் பெரு நிலப் பிரபுக்களையே பாதிக்கும் என்பதை கிராம மக்களிடையே இன்னும் தெளிவாகப்பதியச் செய்யவேண்டும்.

"தொழில் மயமாக்குவதைப் பொறுத்தமட்டில் ரயான் கூழ் ரப்பர் டயர் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப் பட்டிருப்பது கம்யூனிஸ்ட் அரசாங்கத்தின் பாராட்டத் தக்கசாதனைகள் ஆனால் ராஜ்யத்தில் உள்ள நிதி, தொழில் நுணுக்க ஆதாரங்கள் அனைத்தும் திரட்டப்படத் தக்க அளவில் நம்மால் ஒரு முறை வகுக்க இயலவில்லை என்பது ஒத்துக் கொள்ளப்பட வேண்டும். ஐந்தாண்டுகாலமும் நிர்வாகப் பொறுப்பில் நீடிக்க அனுமதிக்கப்பட்டிருந்தால் இந்தவேலை சாத்தியமாகியிருக்கும்.

"திட்டங்களை நிறைவேற்றுவதில் சென்னைக்கு அடுத்தபடியாக முன்னணியில் நின்றது கேரளம் தான்".

"கூட்டுறவு இயக்கத்தைப் பிரமாண்ட அளவில் விஸ்தரித்தது சரியான பாதையில் மேற்கொள்ளப்பட்ட மற்றொரு முயற்சியாகும். இத்துறையில் கேரளம் இந்தியாவின் இதர பாகங்களுக்கு வழிகாட்டியாக உள்ளது".

"கேரளக் கல்விச் சட்டம் ஒரு ஜனநாயக சமுதாயத்தின் முக்கியத்துவம் நிறைந்த சீர்திருத்தமாகும். ஆனாலும் இச்சட்டத்துக்கு எதிராக கிறிஸ்தவ மதபீடம் கிறிஸ்தவ மக்களைத் தூண்டிவிட்டது. சமூக பொருளாதார சீர்திருத்தங்களுக்காக கிறிஸ்தவ சாதாரண மக்களிடையே கட்சி அயராது உழைக்க வேண்டும் என்பதையே இது குறிக்கிறது".

"அரசாங்க ஊழியர்களுக்கும் பின்தங்கிய சமூகத்தினருக்கும் தன்னால் சாத்தியமானவற்றையெல்லாம் கம்யூனிஸ்ட் அரசாங்கம் செய்தது". (பி. டி. ஐ.)

# அறிவிப்பு

மதுரை ஜில்லா பாத யாத்திரை குழுவுடன் வந்த அய்யாவு என்ற இளம் வாலிபர் பல பொய்க்காரணங்களைக் கூறி கட்சி கிளைகளில் பண உதவி கோருவதாகவும், சில இடங்களில் உதவி பெற்றிருப்பதாகவும் தெரிகிறது. அந்த வாலிபர் கட்சியில் அங்கத்தினருமல்ல, உதவி கோர வேண்டியவருமல்லவென்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

**எ. அப்துல்வஹாப்,**
செயலாளர்
பெரியகுளம் தாலுகா கமிட்டி,
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி.

# சூரமங்கலத்தில் 'வரி கொடுப்போர் சங்கம்' ஆரம்பிக்கப்பட்டது

சேலம், நவ. 25—

22-11-59-ல் சூரமங்கலம் பஞ்சாயத்து போர்டு பிரதேசத்தில் வரி கொடுப்போர்சங்க அமைப்பு கூட்டம் திருவாளர் சீனிவாச பிள்ளையின் மில்லில் நடைபெற்றது. கூட்டத்தில்சூரமங்கலம்பஞ்சாயத்து போர்டின் வரிக்கொள்கைகள் பற்றி ஆராயப்பட்ட பின் "வரி கொடுப்போர் சங்கம்" ஆரம்பிக்கப்பட்டது.

இந்த சங்க நிர்வாக உறுப்பினர்களாக 17 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். அதில் தோழர்கள் கே. பாலன், ஏ. பெரியதம்பி, கே மாரிமுத்து, மற்றும் திருவாளர்கள் டி. பி. சீனிவாச பிள்ளை, ராமச்சந்திரன் ஆகியோர் அங்கம் வகிக்கின்றனர்.

# அனகாபுத்தூரில்

பல்லாவரம், நவ. 23—

பல்லாவரத்தையடுத்த அனகாபுத்தூரில் விலைக்குறைப்பு சர்வ கட்சிக்குழு சார்பில் 20-11-59ல் ஊர்வலமும் 2000 பேர் திரண்ட பொதுக்கூட்டமும் நடைபெற்றது. கூட்டத்துக்கு திரு. ஜி. எத்திராஜுலு தலைமை வகித்தார். தோழர்கள். எம். ஆறுமுகம், சைதை எஸ். கோவிந்தசாமி, எம். மாணிக்கம் (கம்யூ), ஆர். மணி, சி. ராமலிங்கம் (தி. மு. க.) ஆகியோர் சர்க்காரின் உணவுக்கொள்கையைக் கண்டித்துப் பேசினார்கள். சர்வகட்சி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு முதலமைச்சருக்கு அனுப்பப்பட்டது.

# தெ. ஆ. கவர்னர் ஜெனரல் காலமானர்

பிரிடோரியா, நவ. 25—

தென்னாப்பிரிக்காவின் கவர்னர் ஜெனரல் டாக்டர் ஏர்னஸ்ட் ஜேன்சென் இன்றிரவு காலமானர்.

## குஜராத், மகாராஷ்டிர ராஜ்யங்கள் அமைப்பு

### 9 பேர் குழு சம்மதம்

புதுடில்லி, நவ. 26— காங்கிரஸ் காரியக் கமிட்டி இங்கு டிசம்பர் 3ல் கூடும் பொழுது, பம்பாய் ராஜ்யப் பிரிவினை சம்பந்தமாக ஏற்படுத்தப்பட்ட 9 பேர் குழுவின் முடிவை திருமதி இந்திரா காந்தி அக்கூட்டத்தில் வைப்பார்.

அக்குழுவின் தலைவர் உள் நாட்டு அமைச்சர் பண்டித பந்த். மகாராஷ்டிரா, குஜராத் என இரு தனி ராஜ்யங்களை அமைப்பதற்கு அக்கமிட்டி சம்மதம் தெரிவித்துள்ளதாம். அவுல் விதர்ப்பா பிரச்சினையில் சிக்கல் இருக்கிறதென்றும் இது காங்கிரஸ் மேலிடத்தின் தீர்ப்புக்கே விடப்படுமென்றும் தெரிகிறது.

## நீர்மட்டம்

சென்னை, நவ. 26—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 25-11 | 116 9 அடி |
| பெரியாறு | 24-11 | 46 8 அடி |
| வைகை | 24-11 | 58 6 அடி |
| பாபநாசம் | 24-11 | 135 3 அடி |
| கிருஷ்ணகிரி | 25-11 | 46 0 அடி |
| சாத்தனூர் | 25-11 | 90 8 அடி |
| மணிமுத்தாறு | 24-11 | 96·2 அடி |

## இன்றைய சினிமா

மதுரை : ஸ்ரீ லக்ஷ்மி-தங்கம்
மதுரை : பரமேஸ்வரி- குடும்ப கவுரவம்
மதுரை : ஸ்ரீ தேவி-அவள் யார்
மதுரை : செட்டி நினைமா- யானை வளர்த்த வானம்பாடி
புதுக்கோட்டை : பழனியப்பா- பாகப் பிரிவினை
அரியலூர் : கடராஜா- பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்
சோமனூர் : ஸ்ரீ குமார்- நான் சொல்லும் ரகசியம்
சிவகாசி : கனகலக்ஷ்மி- புலி செய்த கல்யாணம்
பொள்ளாச்சி : செல்வம்- பாகப் பிரிவினை
போடி : சென்ட்ரல்- வாழவைத்த தெய்வம்
கரூர் லைட்ஹவுஸ்- பாகப்பிரிவினை

## எல்லைகளைக் காக்க அவசியமான படைகள் நிறுத்தப்பட்டுள்ளன

### புகார்களுக்கு ஆதாரமேயில்லை

### பாதுகாப்பு அமைச்சர் விளக்கம்

புதுடில்லி, நவ. 26— எல்லைகளைப் பாதுகாக்க அவசியமான படைகள் அமர்த்தப்பட்டிருப்பதாகப் பாதுகாப்பு மந்திரி திரு. வி. கே. கிருஷ்ண மேனன் இன்று மக்கள் சபையில் அறிவித்தார். உறுப்பினர்கள் கரகோஷம் செய்தனர்.

சீன-இந்திய எல்லைப் பிரச்சினைகள் பற்றிய இரண்டாவது வெள்ளை அறிக்கையை விவாதிக்க வேண்டுமென பிரதமர் நேரு கொண்டுவந்த பிரேரணைமீது நடந்த விவாதத்தில் பாதுகாப்பு மந்திரி கலந்துகொண்டார். அவர் பேசுகையில், "நமது படைகளின் மன உறுதியும் கட்டுப்பாடும் இன்றுள்ளதுபோல் என்றுமே இருந்ததில்லை" என்றார். (கரகோஷம்).

எல்லைகளின் பாதுகாப்புப் பற்றியும் அதுவிஷயமாகப் பாதுகாப்பு மந்திரி ஒன்றுமே செய்யவில்லை என்றும் புகார் கூறப்பட்டது. அவுல் இச்சபையில், சர்க்காரின் கொள்கை எத்தனையோ முறை தெரிவிக்கப்பட்டது. யாரும் அதை மறுத்துப் பேசியதில்லை. நமது சர்வதேச எல்லைகளில் அதாவது கோவா எல்லையிலோ பாகிஸ்தான் எல்லையிலோ அல்லது சீன எல்லையிலோ படைகளை நிறுத்தி வைப்பதில்லை என்பதே அக்கொள்கை.

ஒரு புதிய நிலைமை ஏற்பட்டதும் அந்தக் கொள்கை திருத்தப்படுமென்று [illegible].

### சீன எல்லைப் பிரச்சினை

கனடா-அமெரிக்க எல்லையில் ராணுவமும் இல்லை. அதுபோலவே சீன-இந்திய எல்லையிலும் எவ்விதப் படையும் அமர்த்தப்படவில்லை. சீனாவும் இந்தியாவும் நேச உறவுள்ள அண்டை நாடுகளாக நடந்து கொள்ளுமென்றும், ராணுவ நடவடிக்கைக்கு எவ்வித காரணமும் இருக்காதென்றும் நம்பப்பட்டது.

எல்லையில் காவல் நிலையங்கள் கூட ராணுவ அம்சம் பொருந்தியவையல்ல. வர்த்தக மார்க்கங்களைப் பாதுகாப்பதும், வியாபாரிகளுக்குப் பாதுகாப்பு அளிப்பதும், சுங்கம் முதலிய விஷயங்களைக் கவனிப்பதுமே அந்தக் காவல் ஸ்தலங்களின் வேலை. ஆகவே எல்லைப் பாதுகாப்பு சரியாக இல்லை என்று குறைகூறுவதற்கு ஆதாரமே இல்லை. இன்றுள்ள புது நிலைமை எதிர்பார்க்கப்படாதபோது குறைகூறவே முடியாது, என்றார். (பி.டி.ஐ.)

## ரத்து அதிகாரம் எடுபட வேண்டும்

### சோவியத் யோசனை

ஜெனிவா, நவ. 26— அணுசக்தி ஆயுத சோதனைகளை அறவே நிறுத்திவிட வழிமுறைகளை ஆராய்ந்துவரும் மூவல்லரசு மகாநாட்டில் நேற்று சோவியத் யூனியன் ஒரு புதிய யோசனையைத் தெரிவித்தது.

சோவியத் யூனியனும் அதன் சார்பு நாடுகளும் மேலை நாடுகளும் அணுசக்தி ஆயுதசோதனைகளில் ஈடுபடக் கூடாதென்று தடை செய்து, அத்தடையின் அமுலைக் கண்காணிப்பு செய்யும் கட்டுப்பாடு கமிஷனின் எல்லா முடிவுகளிலும் ரத்து அதிகாரம் பிரயோகிப்பதாக இருக்கக் கூடாதென்றும் ரத்து அதிகாரம் எடுபடும் புது விதி முறைகளை வகுக்க வேண்டுமென்றும் சோவியத் யூனியன் மேலை நாடுகளுக்கு யோசனை கூறியது.

அந்த யோசனையைப் பரிசீலனை செய்ய பிரிட்டனும் அமெரிக்காவும் அவகாசம் கோரின. மகாநாடு மீண்டும் வெள்ளிக்கிழமைவரை ஒத்திவைக்கப்பட்டது.

## சந்திரனை நோக்கி ராக்கெட்

### அமெரிக்க முயற்சிக்கு மீண்டும் தோல்வி

கேப்கானவரல், நவ. 26— சந்திரனைச் சுற்றி வரவேண்டுமென்று அனுப்பப்பட்ட அமெரிக்க ராக்கெட் மறுபடியும் தோல்வியடைந்தது. 372 ராத்தல் எடையுள்ள இந்த ராக்கெட் அனுப்பப்பட்ட 1 மணி 28 நிமிடத்தில் முயற்சி தோல்வியுற்றதாக அறிவிக்கப்பட்டது.



## போலி பாஸ்போர்ட் குறித்து விசாரணை

### பிரதமர் நேரு பதில்

புதுடில்லி, நவ. 26— கள்ளத்தனமான பாஸ்போர்ட் கையாளுவது குறித்து பூரண விசாரணை மேற்கொள்ளப்படுமென்று ராஜ்ய சபையில் பிரதமர் நேரு கூறினார். இவ்விசாரணை சட்ட விரோதச் செயலைத் தடுப்பதற்கும், குற்றவாளிகளைத் தண்டிப்பதற்கும் நல்ல பயனை விளைவிக்கும் என்று ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையிலேயே நேரு மேற்கூறியவாறு கூறினார். அவர் மேலும் பேசுகையில், கள்ளத்தனமான பாஸ்போர்ட்டின்மூலம் நூற்றுக்கணக்கான மக்கள் கப்பல் மூலம் இந்தியாவைவிட்டு சென்றுள்ளனர். இவர்களால் இந்தியாவிற்கு பெரும் தொல்லைகள் ஏற்பட்டுள்ளன. இவர்கள் பிரிட்டனுக்கு மட்டுமல்ல, இத்தாலிக்கும் பிரான்சுக்குமே போய்விட்டார்கள் என்றார்.

நேர்மையான பாஸ்போர்ட்டை உடையவர்களும் கூட பிரான்ஸ், இத்தாலி போன்ற நாட்டில் சந்தேகிக்கப்படுகிறார்கள் என்று டாக்டர் ஏ. என். போஸ் கூறியதை நேரு ஒப்புக்கொண்டார்.

"இதை மாற்றுவதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறோம். கள்ளத்தனமான பாஸ்போர்ட் மூலம் செல்வோரைத் தடுப்பது தான் இதற்கு நேரான வழி" என்று நேரு கூறினார்.

## பண்டாரநாயகா கொலை வழக்கு

### 7 பேர் மீது குற்றப்பத்திரிகை தாக்கல்

கொழும்பு, நவ. 26— முன்னாள் இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா கொலை சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டிருந்த, முன்னாள் நிதிமந்திரி ஸ்டான்லி டிஸொய்ஸாவின் சகோதரர் எப். ஆர். டிஸொய்ஸா இன்று போலீஸ் காவலிலிருந்து விடுதலை செய்யப்பட்டார்.

பண்டாரநாயகா கொலை வழக்கில், போலீசார் இன்று இதர 7 பேர்கள்மீது குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தனர். காலஞ்சென்ற பிரதம மந்திரி பண்டாரநாயகாவைக் கொலை செய்ய சதி செய்ததாக அவர்கள்மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

செப்டம்பர் 25ல் பண்டாரநாயகா சுடப்பட்டபோது ஸ்தலத்தில் கைது செய்யப்பட்ட சோமராமா தெரோ 4வது குற்றவாளியாகக் குறிக்கப்பட்டுள்ளார். அவர்மீது கொலைக் குற்றம் ஒன்றும் சாட்டப்பட்டுள்ளது.

டிஸொய்ஸாமீது எத்தகைய குற்றச்சாட்டும் கொண்டு வரப்படாததால், கொழும்பு மாஜிஸ்ட்ரேட் கோர்ட் அவரை விடுதலை செய்தது. இதர 7 பேர்களை டிசம்பர் 7ந் தேதிவரை ரிமாண்டில் வைக்க மாஜிஸ்ட்ரேட் உத்திரவிட்டார்.

### சதிக்குற்றம் சாட்டப்பட்ட 7 பேர்கள்

சதிக் குற்றம் சாட்டப்பட்டுள்ள ஏழு பேர்களின் பெயர்கள் வரிசைகிரமமாகப் பின்வருமாறு: மபிதிகாமா புத்தரகிதா தெரோ (கெலனியா என்றவிடத்திலுள்ள புத்தமதக் கோயிலின் பிரதம புத்த சந்யாசி); அனுரா டிசில்வா (மோட்டார் மெகானிக்); எச். பி. ஜெயவர்த்தனே (வர்த்தகர்); சோமராம தெரோ; நியூடன் பெரைரா; (போலீஸ் இன்ஸ்பெக்டர்); விமலா விஜயவர்த்தனே (முன்னாள் அமைச்சர்); அமரசிங்கே (ஆயுர்-வேத வைத்தியர்.)

## தாய்லந்தின் புதிய ஸ்தானிகர்

புதுடில்லி, நவ. 26— இந்தியாவிற்கு தாய்லந்தின் புதிய ஸ்தானிகர் சுகிச் நிம்மனஹேமிண்டா இன்று ராஷ்டிரபதி பவனத்தில், ஜனாதிபதியிடம் தன் பதவி நியமனப் பத்திரங்களைச் சமர்ப்பித்தார்.

## காங்கிரஸ், பி. சோ., லீக் கூட்டணி

### பிற்போக்காளரின் கேடுகெட்ட சேர்க்கை

### அ.இ. சோஷலிஸ்ட் கட்சி பொதுச் செயலாளர் மணக்களாத் கண்டனம்

கள்ளிக்கோட்டை, நவ. 26— அ. இ சோஷலிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் திரு. ஆர். எம். மணக்களாத் இன்று இங்கு நிருபர்களிடம் பேசுகையில், "கேரளத்தில் வரவிருக்கும் இடைத் தேர்தலுக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள காங்கிரஸ்-பி. சோ.-முஸ்லிம்லீக் கூட்டுறவு அரசியல் பிற்போக்காளர்களின் ஒரு கேடுகெட்ட சேர்க்கையாகும்" என்றார். 'கம்யூனிஸ்ட் எதிர்ப்பு இயக்கம்' என்ற முகமூடியின் பின் ராஜ்யத்தின் அரசியலிலுள்ள எல்லா முற்போக்காளர்களையும் களைந்தெறிவதையே இந்த சேர்க்கை நோக்கமாகக் கொண்டுள்ளது என்றும் அவர் கூறினார்.

தங்களுடைய தேர்தல் ஏற்பாட்டுக்குள் ஆர். எஸ். பி. கட்சியைச் சேர்த்துக் கொள்வதற்கு காங்கிரஸ்-பி.சோ.-லீக் கூட்டணி மறுத்ததே இதற்குச் சான்றாகும் என்று மணக்களாத் கூறினார்.

சமீப காலமாக ஆர். எஸ். பி. மிகவும் தீவிரமாகக் கம்யூனிஸ்ட் எதிர்ப்பில் இறங்கியுள்ளது. அப்படியிருந்தும் தங்கள் கூட்டணியில் ஆர். எஸ். பி.யை சேர்த்துக் கொள்ள அவர்கள் மறுத்திருப்பது, சில சமயங்களில் அது சில தீவிரக் கருத்துக்களை வெளியிடுகிறது என்பதனால்தான்.

காங்கிரஸ் — பி. சோ. — லீக் சேர்க்கை, அது சில சமயம் ஒருவிதமான ஸ்திரத் தன்மையை ஏற்படுத்தினாலும்கூட, கேரளத்தில் அது ஒரு முற்போக்கான சர்க்காரை அமைக்க முடியாது. அத்தகைய ஸ்திரத்தன்மை நீடிக்கவும் முடியாது என்றும் மணக்களாத் கூறினார்.

## நேருவின் பேச்சு ஏமாற்றமளித்ததாம்

### அசோக்மேத்தா கூற்று

புதுடில்லி, நவ. 26— இந்திய-சீன எல்லைப் பிரச்சினையைப் பற்றிய விவாதம் மக்கள் சபையில் இன்று மீண்டும் தொடர்ந்து நடைபெற்றபோது நேற்று பிரதமர் நேரு செய்த பிரசங்கம் தனக்கு ஏமாற்றத்தையே அளித்ததாக பி. சோ. தலைவர் அசோக்மேத்தா கூறினார்.

சீனப் பிரதமர் சூ-யென்-லாயிக்கு பிரதமர் நேரு அனுப்பிய மாற்று யோசனைகளில் குறிப்பிட்டிருந்தபடி, இந்தியப் படைகளை எல்லையிலிருந்து வாபஸ் பெறக்கூடாதென்றும், இந்தியா சீனாவுக்கு எச்சரிக்கைவிட வேண்டுமென்றும் அவர் கூறினார்.

## பாதுகாப்பு சபை விஸ்தரிப்பு பிரச்சினை

புதுடில்லி, நவ. 26— மக்கள் சீனாவை முதலில் ஐ. நா.வில் அனுமதிக்க வேண்டுமென்று சோவியத் யூனியன் வற்புறுத்திய காரணத்தால் பாதுகாப்பு சபை விஸ்தரிப்பை ஓர் ஆண்டு ஒத்திப்போட நேற்று ஐ. நா. பொதுச் சபை சம்மதித்தது.

பொருளாதார சமூக கவுன்சில் உறுப்பினர்கள் தொகையையும் உலக நீதிமன்ற நீதிபதிகளின் எண்ணிக்கையையும் கூடுதலாக்கும் பிரச்சினைகளையும் ஐ. நா. பொதுச்சபை ஒத்திவைத்தது.

ஒத்திவைப்புக்குச் சாதகமாக 48 ஓட்டுகளும் எதிராக 10 ஓட்டுகளும் கிடைத்தன. 22 நாடுகள் கலந்துகொள்ளவில்லை.

ஐ. நா. ஸ்தாபனங்களில் பிரதிநிதித்துவத்தை அதிகப்படுத்த ஐ. நா. சாசனத்தைத் திருத்த வேண்டும்.

ஆப்பிரிக்க, ஆசிய நாடுகள் தங்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் இருக்கவில்லையென்று புகார் செய்கின்றன.

ஐ. நா. சாசனத்தைத் திருத்த வேண்டுமானால், பாதுகாப்புச் சபையின் நிரந்தர உறுப்பினர்களான சோவியத் யூனியன், பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ், சீனா இவற்றின் உடன்பாடு தேவை. சீனாவுக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்கும் வரையில் ஐ. நா. சாசனத்தைத் திருத்தக் கூடாதென்று சோவியத் யூனியன் கூறுகிறது.

## இலங்கைப் போலீஸ் டிப்டி ஐ.ஜி.க்கு கல்தா

கொழும்பு, நவ. 26— போலீஸ் டிப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரலான ஸிட்னி டி ஸொய்சாவை பதவியிலிருந்து ஓய்வு பெறச் செய்வதென்று இன்றிரவு இலங்கை சர்க்கார் பார்லிமெண்டரி கட்சி முடிவு செய்தது.

பண்டார நாயக்கா கொலை சம்பந்தமான புலன் விசாரணை குறித்து சமீபத்தில் இந்தப் போலீஸ் அதிகாரி ஓர் அறிக்கை வெளியிட்டது தெரிந்ததே. அவ்விதம் அறிக்கை வெளியிடுமாறு அனுமதித்த நீதிமந்திரி ஜயவிக்ரமாவின் நடத்தையை ஆட்சேபித்து அம்மந்திரிமீது பார்லிமெண்டில் எதிர்கட்சியினர் ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரும் தருவாயில் சர்க்கார் கட்சி மேலே கண்டவாறு ஏகமனதான முடிவு எடுத்தது.

## தற்காப்பு பற்றி அயூப்கானுடன் பேச கராச்சி சென்றது தேச பக்தியா?

### மேனனைக் குறை கூறுவோருக்கு காஷ்மீர் பிரதிநிதி சூடு

புதுடில்லி, நவ. 26— இந்திய-சீன உறவுகள் பற்றிய மக்கள்சபை விவாதத்தின்போது, இன்று, திரு. ஏ. எம். டாரிக் (ஜம்மு, காஷ்மீர் தேசிய மகாநாட்டுப் பிரதிநிதி) பேசுகையில், வெளி நாடுகளிடமிருந்து இந்திய ராணுவ உதவி பெற வேண்டுமென்ற யோசனையை எதிர்த்தார். அப்படிச் செய்தால் இந்திய மண்ணில் ஒரு அன்னிய வல்லரசு வந்து குந்திக்கொள்வதற்கு இடமளிப்பதாகும்; அது நாட்டின் சுதந்திரத்தையே ஆபத்திற்குள்ளாக்கும், என்று அவர் கூறினார்.

திரு. கிருஷ்ணமேனனின் தேச பக்தியைக் கேள்வி கேட்பவர்களைப் பற்றி அவர் குறிப்பிட்டு, "ஒருவர் எவ்வளவு பெரியவராயிருந்தாலும், உயர்ந்த அந்தஸ்தில் இருப்பவராயிருந்தாலும், கராச்சிக்குச் சென்றதும், இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையில் பொதுவான பாதுகாப்புக் கொள்கை வகுப்பதற்காக பீல்ட் மார்ஷல் அயூப்கானிடம் பேசினதும் தேசபக்தியா?" என்று அவர் கேட்டார்:

(ஜெயப்பிரகாஷ் நாராயணனைத்தான் அவர் குறிப்பிடுவதாகக் கருதப்பட்டது.)

## வட கிழக்கு எல்லை பகுதியில் வசதியான பாதை போடப்படுகிறது

புதுடில்லி, நவ. 26— ராஜ்ய சபையில் நவாப் சிங் சௌகான் கேள்விக்கு பதிலளிக்கையில் இந்தியாவின் வட கிழக்கு எல்லைப் பகுதியில் பாதைகள் போடுவதில் குறிப்பாக ஜீப் கார்கள் போவதற்கு வசதியான பாதைகள் போடுவதில் திருப்திகரமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதென்று நேரு கூறினார்.

பாதைகள் போடும் திட்டத்தை விரிவுபடுத்த வேண்டுமென்று அவசியமேற்பட்டால் அத்திட்டம் மேலும் விரிவாக்கப்படுமென்றார். —பி.டி.ஐ.

## லடாக் சம்பவம் பீகிங் உத்தரவினல் நிகழ்ந்ததல்ல

### பிரதமர் நேருவின் பேட்டி

புதுடில்லி, நவ. 26— அக்டோபர் மாதம் 21-ம் தேதி லடாக்கில் 9 இந்திய வீரர்கள் சீனப்படையினரால் கொல்லப்பட்டது பற்றி பிரதமர் நேரு குறிப்பிடுகையில் இது துரதிர்ஷ்டவசமாக நடந்துவிட்டதோர் விபத்து என்றார்.

பால்டிமோர்சன் என்ற அமெரிக்கப் பத்திரிகைக்கு அளித்த பேட்டியின் போது அவர் இவ்வாறு குறிப்பிட்டார்.

மேலும், இந்தத் தாக்குதல் பற்றி அவர் குறிப்பிடுகையில் மேல் இருந்து அதாவது பீக்கிங்கிலிருந்து இதற்கான உத்தரவு எதுவும் பிறப்பிக்கப்படவில்லை. அங்கு ஸ்தலத்திலிருந்த அதிகாரிகளால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவினால்தான் இச்சம்பவம் நடைபெற்றுள்ளது என்றார்.

மேலும் இதுபோன்று சீன—இந்திய எல்லைகளை ஆக்கிரமிக்கும் நிலைமை ஏற்படாது என்றும், இதுபோன்ற எல்லை மோதல்கள் ஏற்படாது என்று தான் நம்புவதாகவும் பிரதமர் அந்த பத்திரிகை நிருபரிடம் தெரிவித்தார்.

இப்பத்திரிகாசிரியர் கடந்த திங்கட்கிழமை புதுடில்லியில் நேருவைப் பேட்டி கண்டார்.

## மைசூரில் கம்யூனிஸ்ட்-எதிர்ப்பாளர் வெறிச்செயல்

மைசூர், நவ. 26— நேற்று மாணவர்கள், சீன எதிர்ப்பு கோஷங்களுடனும் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு கோஷங்களுடனும் ஸ்தல கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்திற்குள் பிரவேசித்து கட்சிக் கொடியையும் கட்சி விளம்பரப் பலகைகளையும் கீழே தள்ளினர்.

## சென்னையில் இந்தோனேஷிய தொழிற்சங்கத் தலைவர்கள்

### விமான நிலையத்தில் வரவேற்பு

சென்னை, நவ. 26— ஐக்கிய நாட்டு கல்வி, விஞ்ஞான கலை ஸ்தாபனத் திட்டத்தின் சார்பில் இந்தியாவிற்கு விஜயம் செய்துள்ள தோழர் அசாதிஜத், தோழர் எஸ். ஹரிஸாஜோ என்ற இந்தோனேஷிய தொழிற்சங்கத் தலைவர்கள் டில்லியிலிருந்து விமான மார்க்கமாக இன்று மாலை சென்னை வந்திறங்கினார்கள்.

விமான நிலையத்தில் அத் தலைவர்களை அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரஸ் செயலாளர் தோழர் கே. டி. கே. தங்கமணி, எம்.பி., சென்னை தொழிலாளர் தலைவர்கள் தோழர்கள் ஏ. எஸ். கே. அய்யங்கார், டி. ஆர். கணேசன், கே. எம். சுந்தரம், ரங்கநாதன், கருப்பண்ணன் முதலியோரும் மற்றும் பலரும் வரவேற்றனர். இந்தோனேஷிய தொழிற்சங்கத் தலைவர்களுக்கு மாலைகள் சூட்டப்பட்டன.

### சிம்சன் கம்பெனி தொழிலாளர் சங்கத்தில்

மாலை 6 மணிக்கு தோழர்கள் அசாதிஜத், எஸ். ஹரிஸாஜோ இவ்விரு தலைவர்களும் சிம்சன் குரூப் கம்பெனி தொழிலாளர் சங்கத்திற்கு விஜயஞ் செய்தனர். அச் சங்கத் தலைவர் திரு. கே. குருமூர்த்தி இந்தோனேஷிய தொழிற்சங்கத் தலைவர்களை வரவேற்று உபசரித்தார்.

### ஹார்பர் தொழிலாளர் சங்கத்தில்

பிறகு இரவு 7-30 மணிக்கு இரு தலைவர்களும் சென்னை ஹார்பர் தொழிலாளர் சங்கத்திற்கு விஜயம் செய்தனர். அங்கே அவர்களை சங்கத் தலைவர் தோழர் ராமசாமி, தோழர் ஏ. எஸ். கே. அய்யங்காரும் மற்றவர்களும் வரவேற்றனர்.

ஹார்பர் தொழிலாளர் சங்க முக்கியஸ்தர்களிடையே இந்தோனேஷிய தொழிற்சங்கத் தலைவர்கள் இருவரும் கலந்து பேசினர். வரவேற்புக்கு இரு தலைவர்களும் நன்றி தெரிவித்தனர்.

## எங்கள் மரகத . . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

களையும் கொண்டு வருதல் வேண்டும்" என்றார்.

பாதுகாப்புத்துறை அமைச்சர் பற்றி தோழர் முகர்ஜி குறிப்பிடுகையில் "சிறு மனம் படைத்தோர் சிலர் பாதுகாப்புத்துறை அமைச்சர் மீதும் குறை கூறினர்கள். ஆனால் நான் பாதுகாப்புத்துறை அமைச்சரின் ஆதரவாளன் என்று எண்ணிவிடாதீர்கள். நானும் சில சமயங்களில் பாதுகாப்புதுறை அமைச்சரைப் பற்றி பேசியிருக்கிறேன். என்றாலும் இன்று பாதுகாப்புத் துறை அமைச்சர் பல நல்ல தகவல்களைக் கொடுத்து விவாதத்தை நல்ல முறையில் திருப்பினார் என்றார், பின்னர் பிரஜ்ஜேஸ்வர் பிரசாத் என்ற காங்கிரஸ் உறுப்பினர் பேசுகையில் "எல்லை விஷயத்தை சமாதான பூர்வமான பேச்சுவார்த்தையின் மூலமே தீர்க்கவேண்டும். எல்லை விஷயத்தில் நேருவின் கொள்கையை ஆதரிக்கிறேன். எல்லை விஷயம் தீர்க்கப்படுவதற்கு வெளிநாட்டு உதவியை நாம் எதிர்பார்க்கக் கூடாது" என்றார்.

## சீனி வினியோகம் . . .

(1-ம் பக்கம் தொடர்ச்சி)

களுக்கு, வக்கீல்கள் சங்கத்தின் மூலம் கார்டு வழங்கப்பட்டு,சீனி கிடைக்க உத்திரவாதம் ஏற்படுத்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இந்த ஏற்பாடுகள் அதிகாரபூர்வமாக அல்லாமல் தனியானமுறையில் மக்களை பிரிவுபடுத்தும்வகையில் செய்யப்பட்டிருக்கிறது."

'பொதுமக்களுக்கும், சிறு டீ, காபி ஸ்டால்களுக்கும் கார்டு கொடுக்க கலெக்டர் மறுப்பதன் காரணம் புரியவில்லை. ஜனங்களுக்கு முறையாக சீனி கிடைப்பதற்கு தகுந்த ஏற்பாடு செய்வதில், ஒத்துழைப்பதற்குப் பதிலாக, சர்க்கார் அதிகாரிகளைச் சாக்குக்காட்டி, இதுவரை அரைகுறையாக கிடைத்து வந்த சீனியையும் இனி மேல் வினியோகிக்க மாட்டோம் என்று, வியாபாரிகள் முடிவு செய்திருப்பது தவறு என கம்யூனிஸ்ட் கட்சி கருதுகிறது."

"எனவே, விற்பனையாளர்கள், அரசியல் கட்சிகள், வெகுஜன ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் கூட்டத்தை அவசரமாக கூட்டும்படியும் அடையாளக்கார்டு வினியோகிக்கும்படியும், சீனி விற்பனையாளர்களின் ஜாபிதாவை ஸ்தலப் பேப்பர்களில் பிரசுரிக்க வேண்டுமென்றும் கம்யூனிஸ்ட் கட்சி ஜில்லா கலெக்டர் அவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது." என்று கூறியுள்ளார்.

## சோவியத் ஜனாதிபதி இந்தியாவிற்கு விஜயம்

புதுடில்லி, நவ. 25— சோவியத் யூனியன் ஜனாதிபதி வரோஷிலாவ் ஜனவரி 20-ந் தேதி டில்லியில் வந்திறங்குவார். அவர் 15 நாட்கள் இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்வார்.

புதுடில்லியில் நடக்கும் இந்திய குடியரசு தினக் கொண்டாட்டத்தில் சோவியத் ஜனாதிபதி கலந்து கொள்வார்.

சோவியத் ஜனாதிபதியுடன் இரண்டொரு மந்திரிகள் உள்பட உயர்தர சோவியத் அதிகாரிகள் வருவார்கள்.

சீன-இந்திய உறவு சுமுகமாக இல்லாத காலத்தில் சோவியத் ஜனாதிபதி இந்தியாவுக்கு விஜயம் செய்வது விசேஷம் வாய்ந்ததேயாகும்.

நேருவுடன் பேச்சு நடத்த நேபாள பிரதமர் பி. பி. கொய்ராலா ஜனவரியில் டில்லிக்கு வருகிறார்.

ஐக்கிய அரபு குடியரசு ஜனாதிபதி நாசர் ஏப்ரல் மாதம் புதுடில்லிக்கு வருகிறார்.

## அப்பீல் செய்ய எக்ஸ்பிரஸ் நிர்வாகத்திற்கு சுப்ரீம் கோர்ட் அனுமதி

புதுடில்லி, நவ. 26— இந்தியன் எக்ஸ்பிரஸ் குரூப் பத்திரிகைகளில் தொழிலாளர் வேலைநிறுத்தம் செய்தது நியாயந்தானா, அதன்பிறகு நிர்வாகம் எடுத்த நடவடிக்கைகள் உண்மையாகவும், நேர்மையாகவும் வியாபாரத்தை மூடுவதற்கான நடவடிக்கைகளா, அல்லது வியாபாரத்தை மூடும் போர்வையில் பழிவாங்கும் முறையான கதவடைப்பா—என்பதை நிர்ணயிக்கும்படி அண்மையில் சென்னை உயர்நீதி மன்றம், சென்னை தொழில் ட்ரிப்யூனலுக்கு தாக்கீது விடுத்திருந்ததல்லவா? சென்னை உயர்நீதி மன்றத்தின் மேற்படி தீர்ப்பை எதிர்த்து அப்பீல் செய்துகொள்ளுவதற்கு எக்ஸ்பிரஸ் நிர்வாகத்திற்கு சுப்ரீம் கோர்ட்டு இன்று விசேஷ அனுமதியளித்தது.

தொழில் ட்ரிப்யூனல் முன்பு இது விஷயமாக மேற்கொண்டு 3 வாரங்களுக்கு விசாரணை ஏதும் நடக்கக்கூடாதென்று சுப்ரீம் கோர்ட் ஒரு இடைக்காலத் தடையும் விதித்தது.

## உலக வர்த்தகம் பற்றி ஐ. நா. சிபார்சு

ஐ. நா. நியூயார்க், நவ. 25— சர்வதேச வர்த்தகத்திற்குத் தடையாக உள்ள பாரபட்ச முறைகள் அகற்றப்பட்டு பரஸ்பரம் வர்த்தகம் தட்டின்றி நடைபெற ஐ. நா. வில் உறுப்பினர்களாக இருக்கும் நாடுகள் முயற்சி செய்யப் வேண்டும் என்று ஐ. நா. பொதுச்சபையின் பொருளாதாரக் கமிட்டி சிபாசு செய்துள்ளது,

## மார்க்கெட் நிலவரம்

### தங்கம், வெள்ளி

சென்னை, நவ. 27—

| | |
|---|---|
| சவரன் | ரூ. 82- 8 0 |
| தங்கம் (ரெடி) | ரூ. 126-14-0 |
| மூசை தங்கம் | ரூ. 124- 6-0 |
| வெள்ளி 100 தோலா எடை | ரூ. 214- 0 0 |
| வெள்ளி 1ரூ.எடை | ரூ. ·2· 3 0 |

### மணிலா பருப்பு

| | |
|---|---|
| 5:1 ராத்தல் கொண்ட பாரம் 1-க்கு (விற்பனை வரியுடன்) உயர்ந்தரகம் | |
| புது "பட்டாணி" | 170-00 |
| "கொடி" | 175-00 |

### மணிலா எண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி (3 F.F.A) (மொத்த விலை) ரெடி | ரூ. 341-00 |
| டிசம்பர் | ரூ. 336 00 |
| ஜனவரி | ரூ. 333 50 |

### விளக்கெண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. பாரம் 1 க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி) திருப்பத்தூர் | ரூ. 330-00 |

### தேங்காய் எண்ணெய்

| | |
|---|---|
| 37 ரா. கொண்ட பாரம் 1 க்கு கொல்லம் சரக்கு | |
| எம். எஸ். மார்க்கு | 43-00 |
| அம்பு மார்க்கு | 41-25 |
| ராஜா மார்க்கு | 41 25 |

### கடலை புண்ணாக்கு

'எக்ஸ்பெல்லர்'(160ரா.) 26 00

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்டவர் எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்
முகவரி: 32, பிராட்வே, சென்னை-1,
Janasakthi
Broadway, Madras-1.